உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 42 ] துந்துபி ஆண்டு கார்த்திகைத்திங்கள் 10-12-82 [ இதழ் 1

தில்லையம்பலத்தில் 



பதஞ்சலி வியாக்கிரபாதர் வழிபட நடராசப்பெருமான் திருநடம்புரிதல்.

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த ஸ்வாமிகள்

உ
குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—[★]—

புண்டரிகத் தாளைப்
புகழ்ந்து புகழ்ந்துதின
மண்டமரர் கொண்டிறைஞ்சு
மாதியே — தொண்டுபடு
நாயேனை யாண்டுகந்து
நன்னெறிகள் காட்டுவித்த
தாயேநீ சொக்கநா தா.

— சில பிரதிகளில்
காணப்படும் பாடல் 1


ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி அருணைவடிவேல் முதலியார்


உ
குருபாதம்

# " ஞானசம்பந்தம் "


தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 42 || 10-12-82 || இதழ் 1


## உட்பொருள்






ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 12
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 23
ஆண்டுச்சந்தாவெளிநாடு ரூ. 25
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 125
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 250

உ

குருபாதம்

தருமையாதீனம்

“ஞானசம்பந்தம்” திங்கள் இதழ்

# சந்தாதாரர்களுக்கு ஓர் அறிவிப்பு

“ஞானசம்பந்தம்” மாத இதழ் அஞ்சல் கட்டணம் உயர்வாலும் பேப்பர், பிரிண்ட் இங்க் விலை ஏற்றத்தாலும் “ஞானசம்பந்தம்” இதழ் ஆண்டுக் கட்டணத்தில் மாறுதல் செய்யப்பட்டுளது. மேற்படி கட்டணம் 1982 டிசம்பர் 1 ஆந்தேதி முதல் அதாவது ஞானசம்பந்தம் **மலர் 42 ஆரம்பமுதல்** அமுலாக்கப்படுவதால் பழய சந்தாதரார்களுக்கு புதிதாக சந்தா சேர்பவர்களும் புதிய கட்டணப்படி சந்தாதொகையை அனுப்பக் கேட்டுக் கொள்கிறோம்.

1983 ஜனவரி 31 ஆந்தேதிக்குள் மேற்குறிப்பிட்டுள்ள படி சந்தாத் தொகை கிடைக்கச் செய்யவேண்டும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## சந்தா விபரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா ( உள்நாடு ) | ... | ரூ. 12—00 |
| ஆண்டுச் சந்தா ( சிலோன் ) | ... | ரூ. 23—00 |
| ஆண்டுச் சந்தா ( வெளிநாடு ) | ... | ரூ. 25—00 |
| ஆயுள் சந்தா ( உள்நாடு ) | ... | ரூ. 125—00 |
| ஆயுள் சந்தா ( வெளிநாடு ) | ... | ரூ. 250—00 |

## விளம்பரம்

| | | |
|---|---|---|
| பின் அட்டை வெளிப்பக்கம் | 2 - கலர் | ரூ. 300—00 |
| பின் அட்டை உட்பக்கம் | 1 - கலர் | ரூ. 200—00 |
| இதழின் உட்பக்கம் | ,, | ரூ. 100—00 |
| இதழின் உட்பக்கம் அரைப்பக்கம் | | ரூ. 50—00 |

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி :—

செயலாளர், ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மயிலாடுதுறை – 609 001
தஞ்சை மாவட்டம்.

குறிப்பு :— ஆயுள்சந்தா தொகை அனுப்புவோர் “ஞானசம்பந்தம் திங்கள் இதழ்” என்கிற பெயருக்கு டிராப்ட் எடுத்து அனுப்பக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

# ஏற்றம் மிக்கு ஒளிரும்; காப்பீர்!

புலவர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ., பி. எட்.,

பரபரப் பில்லை; வெற்றுப்
 பகட்டுக்கள் ஏதும் இல்லை;
திரைபடக் கவர்ச்சி இல்லை;
 திசைமாற்றும் வேலை இல்லை;
புரட்டுகள் செய்து மக்கள்
 புன்மையை வளர்ப்ப தில்லை;
வரட்டுவா தங்கள் செய்து
 வம்புகள் முட்டல் இல்லை. (1)

நாற்பதின் மேலோர் ஆண்டு
 நானிலம் போற்ற நின்று,
பார்த்தவர் மெச்சப், பாரார்
 படித்திடத் துடித்து நிற்க,
வார்ப்படத் தங்கம் என்ன
 வளர்ஞான சம்பந் தத்தைப்
போற்றினர் மேலோர் ஏட்டின்
 புதுமையில் வியந்து நின்றார்! (2)

காப்பன காத்துச் சைவம்
 கண்ணெனப் புரந்து போற்றி,
யாப்பறி புலவர் போற்றும்
 இயற்றமிழ் மரபு காத்து,
பூப்பது இசையாய், கூத்துப்
 புதுமைகள் கனிக ளாக
நாற்பதின் மேலோர் ஆண்டு
 நடையிட்டுச் சிறந்த தின்று! (3)

குருமணி அருளும் வாக்கும்,
 குத்தீட்டிப் போலே நின்று
வரும்சைவப் பகையை வெல்லும்
 வனப்புடைத் தலையங் கம்மும்
அருஞ்சைவ நெறிகள் போற்றும்
 அளப்பிலா செய்திக் கோர்வும்
இருப்பது; புதிய ஆண்டில்
 ஏற்றமிக் கொளிரும்; காப்பீர்! (4)

---

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 42 | துந்துபி - கார்த்திகை - 10—12—82 | இதழ் 1

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்,

திருச்சிற்றம்பலம்

# மார்கழி நீராடி மகிழ்வோம்

**மார்கழிச் சிறப்பு :**

தமிழகத்தில் இறைவனுக்கு எடுக்கப்படும் விழாக்கள் பலவும் நிறைமதி நாள்பற்றி (பௌர்ணமி) அமைவன. அது சிவபிரானுக்குரிய திருவாதிரை நாளொடு கூடிவருவது மார்கழித் திங்களிலேயே ஆகும். எனவே, மார்கழித்திங்கள் சிவபெருமானுக்குரிய விழாத் திங்களாயிற்று. அரசனுக்குரிய விழாநாள் நாடுமுழுவதற்கும்விழா நாளாதல்போல, முழுமுதற்கடவுளாகிய சிவபிரானுக்குரிய மார்கழித்திங்கள் ஏனைய தேவர் பலர்க்கும் விழாத்திங்களாயிற்று. எனவே, மார்கழி, திங்கள் பன்னிரண்டினுள்ளும் சிறந்ததாயிற்று. இதுபற்றியே இதனைப் பீடுடைய மாதம் என்றனர். சைவ - முதன்மைத் தலமாகிய சிதம்பரத்தில் மார்கழியே பெருவிழாத்திங்களாகப் போற்றப்பெறுதல் இதனை மெய்ப்பிக்கும். தேவதேவனாகிய சிவபிரானது திருவாதிரை விழாவைத் தேவர் பலரும் ஒருங்குகூடி வழிபட்டுச் சிறப்புறுவர் என்பதனை 'ஆரார் வந்தார் அமரர் குழாத்தில் அணியுடை ஆதிரைநாள்' என்ற சேந்தனாரின் திருப்பல்லாண்டு விளக்கிக் காட்டும். திருவாதிரைச் சிறப்பினை நாவரசர் ஒரு திருப்பதிக வாயிலாகவே எடுத்துரைத்தார்.

**பரிபாடல் சான்று :**

மார்கழி நீராடல் நெடுங்காலமாகத் தமிழகத்தில் நிலவி வந்திருப்பதைப் பல இலக்கியச் சான்றுகளால் அறியலாம். 'விரிகதிர் மதியமொடு' என்று தொடங்கும் பரிபாடலுள்' மார்கழித்திங்களில் சிவபிரானுக்குத் திருவாதிரை விழா எடுத்தலும், அந்நாட்களில் உலகு செழிக்க அந்தணர் வேள்வி வேட்டலாகிய தம் தொழிலைச் சிறக்கச் செய்தலும், இல்லறத்தவராகிய ஆடவரும் பெண்டிரும், அந்நாளிற் சென்று தீர்த்தமாடித் தாம் தாம் விரும்பியவற்றைப் பெற இறைவனை வேண்டி நிற்றலும், அவரிடையே சிற்றிள மகளிரும், முதுபார்ப்பனியர் சொல்வழியே நோற்றலை மேற்கொண்டு, தம் தாய்மாரோடு சென்று நீராடலும் போன்ற தவச்செயல்கள் விரிவாகக் குறிக்கப் பெற்றுள்ளன.

**இருபாவைகள் :**

சமயஇலக்கியங்களுள் மணிவாசகரின் திருவெம்பாவையும், ஆண்டாளின் திருப்பாவையும் மார்கழி நீராடல் பற்றிய விரிவான குறிப்புக்களை வழங்குகின்றன. பொதுவாகக் கன்னிப் பெண்கள் நாட்காலை எழுந்து நீராடி, இறைவனை வணங்கி நாடு செழிக்க மழை வேண்டியும், தங்கட்கு உரிய நல்ல கணவர் அமையவேண்டியும் பிரார்த்திப்பதாக இப்பாடல்களின் உள்ளுறையை விளக்குதல் மரபு. திருப்பாவையில் 'பாவை நோன்பு' பற்றிய குறிப்புக்களும், கண்ணனையே கணவனாக அடைய வேண்டிப் பெண்கள் நோற்றமையும் நன்கு புலப்படுத்தப் படுகின்றன. திருவெம்பாவையில் 'பாவை நோன்பு' பற்றிய குறிப்புக்கள் சிறப்பாக இல்லை. சிவனடியார்களே தமக்கு மணாளராக வேண்டுமென்ற வேண்டுகோள் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது.

**அறிஞர் கருத்துக்கள் :**

இந்தியப் பெருநாட்டில் நாடு தழுவிய பண்டைப் பெருவிழாவாக நீராட்டு அமைந்திருந்தது. வடநாட்டில் கொண்டாடப்படும், வண்ணநீரை வாரி இறைத்தாடும் ஹோலிப் பண்டிகை போல்வன கேளிக்கை வகையின. தென்னாட்டில் தைந்நீராட்டு எனவும், அம்பா ஆடல் எனவும் போற்றப்பெற்ற மார்கழி நீராடல் போல்வன கடவுள் நோன்பின் வகையின. நீர்விளையாட்டே காமக்களி விளையாட்டாக வளர்ந்ததனைப் பரிபாடல் விரிவாகக் கூறும் புது நீராட்டிலும், கம்பனின் நீர் விளையாட்டுப் படலத்திலும் காணலாம். வாத்சாயனர் தமது காம சூத்திரத்தில் காமக்களியாட்டில் ஒன்றாகச் 'சலக் கீரிடை'

என்ற நீர்விளையாட்டைக் குறிக்கிறார். ஆயின் புனிதநீராடலோ, கங்கையாடல், துலாமுழுக்கு, தீர்த்தவாரிஎன கடவுட்கொள்கை அடிப்படையில் வளர்ந்தன. இவ்வாறு இதனை விளக்குவர் திரு. தெ. பொ. மீ. திரு. மு. இராகவையங்கார், தாய்க் கடவுளின்வடிவை மணலில் அமைத்து வணங்கிப் பின்நீராடு வதே மார்கழிநீராடல் என்பதும், அம்மானை, ஊசல் முதலியன போல இத்திருவெம்பாவையும் மகளிர் விளையாட்டுப்பாடலே என்பதும், அவ்விளையாட்டு இங்கே நீர்விளையாட்டாகும் என் பதும், அந்நீராட்டினை மணிவாசகர் மார்கழிநீராடலாக வரை யறுத்தருளினர் என்பதும் முந்தையோர்கண்ட முறையாகும்.

## ஆதிரை விழா :

மணிவாசகர் அருளிச்செய்த திருவெம்பாவையால் கூறப் படும் மார்கழி நீராடலே சங்க நூல்களில் வரும் தைந்நீராட் டாகும். தைந்நீராட்டு என்பதனை, மார்கழி நிறைமதிநாள் தொடங்கி, தை நிறைமதிநாள் நிறைவிக்கும் நீராட்டென்பர் ஒருசாரார். பிறிதொருசாரார் தை முதல் நாளில் ஆடும் நீராட்டு என்பர். தற்காலத்தில் ஆதிரை விழா, ஆதிரைக்குப் பத்துநாள் முன்னதாகத்தொடங்கி ஆதிரையில் நிறையுமாறு கொண்டாடப் படுகிறது. திருவாதவூரடிகள் புராணத்துள் கடவுள்மாமுனிவர்.

“ மாதர்கொள் மாதர் எல்லாம் மார்கழித் திங்கள் தன்னில்
ஆதிரை முன்னி ரைந்தே ஆகிய தினங்கள் தம்மில்
மேதகு மனைகள் தோறும் அழைத்திருள் விடிவ தான
போதிவர் தம்மிற் கூடி புனற்றடம் ஆடல் செல்வார் ”

என இதனை உறுதிப்படுத்துவார். இதனைப் பிற்காலவழக் கென்றும், ஆதிரை நாள் நீராட்டே மார்கழி நீராட்டென்றும் கொள்வதே பொருத்தமானதாகக் கூறுவர் வேறுசிலர்.

## தத்துவ விளக்கம் :

மார்கழி நீராடல் பற்றிக் கூறும் திருவெம்பாவைப் பகுதிக்கு முன்னோர் ‘ சக்தியை வியந்தது ’ எனக் குறிப்புரைத்தனர். இது திருவெம்பாவையின் பதினான்கு, மற்றும் பதினாறும் திருப் பாடல்களை நோக்கிய குறிப்பாகத் தெரிகிறது. இவ்விருபாடல் களும் அம்மையைத்தனியாகவிதந்துபாடுவன. உலகத்தோற்றம் பற்றி முதற்கண் எழுந்த மனோன்மணி என்னும் சிவசக்தி சருவபூததமனியை எழுப்ப, இவ்வாறே ஒவ்வொருவரும் பலப் பிரமதனி, பலவிகரணி, கலவிகரணி, காளி, இரௌத்திரி, சேட்டை, வாமை என்பதை அடுத்தடுத்து எழுப்புதலையே இப்பாடல்கள் கருதின என உள்ளுறைப் பொருள் உரைப் பாரும் உளர். ‘ மலவிருள் உற்று உறங்காமல் – மன்னுபரிபாகர்

அருட் சலம் முழுக வருகவெனச் செப்பல் திருவெம்பாவை' என்ற குறிப்பும் இதுபற்றிக் கூறப்படுகிறது.

**திருவெம்பாவைச் சிறப்பு :**

கருத்து வேறுபாடுகள் பலவாக இருப்பினும், புனிதத் திங்கள் மார்கழி என்பதும், ஆதிரை விழாவின் சிறப்பும், நாட் காலை எழுந்து நீராடி சிவபெருமானின் புகழ்பாடி வணங்குதல் வேண்டும் என்பதும் மார்கழி நீராடலின் நோக்கம் என்பதில் முரண்பாடு ஏதும் இருக்க வாய்ப்பில்லை. சிவாலயங்களில் மார்கழித் திங்களில் திருவெம்பாவை மட்டுமே ஓதி வழிபடும் வழக்கம் இன்றும் உள்ளது. திருவெம்பாவை சிவபெருமான் அருளையும், திருவிளையாடல்களையும், பறந்துபட்ட புகழையும், பஞ்ச கிருத்தியங்களையும் நிரல்பட விரித்துரைக்கிறது. நீராடல் முறையும், அடியவர் இயல்பும் அழகுற விளக்கப்பட்டுள்ளன.

**நீராடி உய்வோம் :**

தேள்கொட்டினால் அவ்விஷத்தைக் குறைக்கத் தண்ணீரில் குளித்து தண்ணீரிலேயே சிறிது நேரம் இருக்கும் பழக்கம் இன்றும் காணுகிறோம். விஷவேகத்தைக்குறைக்கும் ஆற்றல் தண்ணீருக்கு உண்டு. வெட்டுக்காயங்களுக்கு ஈரத்துணியைச் சுற்றி முதலுதவி அளிப்பதைச் சிற்றூர்களில் காணலாம். தண்ணீரில் மின்னாற்றல் இருக்கிறது. அவ்வாற்றல் சூரிய உதயத்திற்கு முன்னர் அதிகம் இருக்கிறது. அதனால்தான் சூரியன் உதிக்க ஒருமணி நேரத்திற்கு முன்பே நீராடவேண்டும் என்றனர் முன்னோர். அப்பரும் " பெரும் புலர் காலை மூழ்கி " என்றருளிச் செய்தார். தண்ணீரில் குளித்தால் குளிரைத் தாங்கும் சக்தி நமக்கு ஏற்படுகிறது அதனால் குளிர் போய் விடுகிறது. வெந்நீரில் குளித்தால் குளிக்கும் வரை குளிர் தெரியாது. குளித்த பிறகு மிகுதியாகக் குளிரும். வெந்நீர் நரம்புத்தளர்ச்சியை ஏற்படுத்தி நமது உடம்பின் வலிமையைக் குறைக்கிறது. இதனால்தான் மணிவாசகர் சீதப்புனலாடிஎன்றார். எனவே மார்கழித்திங்களில் நாட்காலையில் எழுந்து,சிவசிந்தனை யுடன் தூயநீரில் நீராடி, சிவசின்னங்கள் அணிந்து, அடியவர் களுடன் திருவீதிகளில் இறைவன் புகழ்பாடி வலம்வந்து, திருக் கோயில் சென்று கூத்தப்பிரானை வழிபட்டு, திருவெம்பாவை யைப் பாராயணம் செய்து, பிற உலகியல் விழாக்களைத் தவிர்த்து, இயன்றவர்கள் தில்லை சென்று ஆதிரை நாள் தரிசனம் செய்து, இயலாதவர் உள்ளூர்ச் சிவாலயத்தில் நடராச தரிசனம் செய்து, ஓர் ஆண்டுக்கு ஓர் திங்களை வழிபாட்டில் செலவிட்டு இம்மை மறுமை இன்பம் பெற்று உய்வோமாக !

மார்கழி நீராடுக, மகிழ்ந்து நீரும் பாடுக.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

**மாதிரவேளூர் திருக்கோயில் மின்விளக்கு ஏற்றிவைத்து**

வழங்கியருளிய

# ஆசியுரை

26—6—1982

"ஒளிவளர் விளக்கே! உலப்பிலா ஒன்றே!
உணர்வுசூழ் கடந்தோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்கும் தேனே!
அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே!
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துக்கந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே."

**ஊரும் பெயரும்**

நமதுநாட்டிலுள்ள பெரும்பாலான ஊர்களின் பெயர்கள், தெய்வ சம்பந்தமான வரலாற்றுடன் தொடர்பு கொண்டன வாகவே இருத்தலைக் காணலாம். அந்தவகையில் 'மாதலீபுரம்' என்று அழைக்கப் பெறும் இவ்வூரின் பெயரும் ஒரு தெய்வ சம்பந்தமான வரலாற்றுடன் இணைந்துள்ளது. இலங்கையில் இராமபிரானுக்கும் இராவணனுக்கும் போர் நடைபெற்றபோது இராமபெருமானுக்குத் தேர் இல்லாமையைக் கண்டு வருந்திய தேவேந்திரன், தன் சாரதியாகிய மாதலீ என்பானை அழைத்து, "நீ சென்று உதவிசெய்து வருக" என்று ஆணையிட்டான். அதனைச் சிரமேற் கொண்டு சென்ற மாதலீ தேரில் இலங்கை நோக்கிச் சென்றான். அப்போது இவ்வூரில் முன்னமே மணலால் மூடிஇருந்த சிவலிங்கம் உள்ள இடத்தில் தேர் தடைபட்டு நின்றது. செய்வதறியாத மாதலீ உடனே கீழே இறங்கிப் பார்த்தபோது மணற்சிதைவில் சிவலிங்கம் இருக்கக்கண்டான். சிவபெருமானைப் பணிந்து பிரார்த்தித்தான். இறைவன் அருளாணைப்படி இலங்கை சென்று வாகைசூடி மீண்டும் வந்த மாதலீ புதைந்திருந்த சிவலிங்கத் திருமேனியை வெளியில்

எடுத்துப் பிரதிட்டைசெய்து வழிபட்டான். மாதலீயினுல் வழிபட்ட காரணத்தால் இத்தலம் 'மாதலீபுரம்' என வழங்கலாயிற்று.

**வடமதுரை :**

இத்தலம் பற்றிய மற்ருெரு வரலாறும் கூறப்படுகிறது. வசிஷ்ட மகரிஷியின் சாபத்தால் கொள்ளிடத்தில் முதலையாக வாழ்ந்த கந்தருவன் ஒருவன், அங்கு நீராடவந்த விசாரசன்மன் என்னும் சிவபக்தனின் காலைப்பற்ற அவன் ஐந்தெழுத்துமந்திரமாகிய மகாமந்திரத்தைச்சொல்ல அதுகேட்ட முதலையாயிருந்த கந்தருவன் சாப விமோசனம்பெற்று பழயவடிவம் பெற்ருன். அவன் பின்னர் பலகாலம் இத் திருக்கோயிலின்கண் தங்கி வழிபாடுசெய்துவந்தான். அவனுக்குஇறைவன்மீனுட்சிசுந்தரேசுவரராகத் திருக்கல்யாண கோலத்துடன் காட்சி தந்தருளினுர். அது முதல் இத்தலம் வடமதுரை என்றழைக்கப் பெறுவதாயிற்று திருக்கல்யாணக்காட்சி தந்தருளிய திருக்கோயில்களில் இறைவியின்திருக்கோயில் இறைவனின் வலப்பாகத்தில்அமைந்திருத்தல்மரபு. எடுத்துக்காட்டாகத் திருவதிகை, மதுரை போன்ற தலங்களைக் காணலாம். அவ்வகையில் இங்கும் இறைவனுக்கு வலப்பாகத்தில் அம்பாளின் திருக்கோயில் அமைந்துள்ளது. இறைவி சந்நிதியின் எதிரில் மதுரையில் உள்ளது போல் பொற்ருமரைக் குளமும் அமைந்துள்ளது. இங்ஙனம்வடமதுரை என்றழைக்கப்பெறும் சிறப்புடைய இம்மாதலீபுரம் இன்று திரிந்து மாதிர வேளூர் என்றும், மாதர்வேளூர்என்றும், மாதலூர் என்றும் அழைக்கப்பெறுகிறது.

## புறஇருளும் அகஇருளும்

இத்திருக்கோயிலின் கண் மின் விளக்குகள் இல்லாத நிலையில் இதுகாறும் புறஇருள் சூழ்ந்திருந்தது. இன்று இந்நிலையைப் போக்கி ஆண்டவன் எழுந்தருளியுள்ள இடம் விளக்கமாக ஒளியுடன்திகழ விரும்பிய இவ்வூர்ப் பக்தர்கள்சிலர் மின்விளக்கினைப்பொருத்தியுள்ளார்கள். இதுமகிழ்ச்சிக்குரியது. மின்விளக்குகள் ஏற்றிப் புறஇருளைப் போக்கியுள்ள இந்நாளில் இங்குச் சிலவற்றைச் சிந்திப்போம்.

ஆண்டவன் ஒளிவடிவானவன். இதனை வேத சிவாகமங்களும் புராண இதிகாசங்களும் திருமுறைகளும் பலவாருக விளக்கிக் கூறுகின்றன. திருநாவுக்கரசர், " தேச விளக்கெலாம் ஆனுய்நீயே; திருவையாறு அகலாத செம்பொற் சோதீ " என்று குறிப்பிடுகின்ருர். மாணிக்கவாசகரும், " ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி " என்று இயம்புகின்ருர். திருமாளிகைத்தேவரும், "ஒளிவளர்விளக்கே!உலப்பிலா ஒன்றே!"

என்று விதந்து கூறுகின்றார். இங்ஙனம் அருளாளர்கள் பலரும் இறைவனை, 'சோதி' என்றும் 'விளக்கு' என்றும் 'ஒளி' என்றும் அருளுகின்றமைக்குரிய காரணத்தை இங்குச் சிந்தித்தல் பொருத்தமாகும்.

புறஇருளாகிய உலக இருளைப்போக்கக் கண்ணுக்குத் தெரிகின்ற ஒளிவிளக்குகள் பலவும் இறையருளாணையால் அமைந்துள்ளன. அக இருளாகிய அறியாமையை நீக்க கருத்துக்குத் தெரிகின்ற அறிவாகிய ஒளிவடிவான ஆண்டவனே அமைந்துள்ளான். புறஇருளைப் பற்றியும் அகஇருளைப் பற்றியும் திருவருட்பயன் ஆசிரியர், சிறப்பாக விளக்குகின்றார்.

" ஒருபொருளும் காட்டாது இருள், உருவம் காட்டும்,
இருபொருளும் காட்டாது இது "

என்பது உமாபதி சிவம் தரும் விளக்கமாகும். புறஇருள் உலகிலுள்ள ஒருபொருளையும் காட்டாது; எனினும் தன் உருவத்தைக் காட்டும். ஆனல் ஆணவம் எனும் அக இருள் உலகப் பொருள்களையும் காட்டாது; தன்னையும் காட்டாது என்பது அவர் தரும் கருத்தாகும்.

## அறிவுவடிவானவன் :

இங்ஙனம் வன்மையாகவுள்ள ஆணவமெனும் அஞ்ஞான இருளைப் போக்க ஆண்டவனின் ஞானம் அல்லது அறிவு எனும் சுடர் விளக்கே தேவைப்படுகின்றது. இதனல்தான் அடியார்கள் எப்பொழுதும் இறைவனுகிய சுடர்விளக்கினை உள்ளத்தின்கண் ஏற்றிவைத்து வழிபடுகின்றனர். இக்கருத்தில் தான் குமரகுருபர அடிகள், " அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உள்ளக் கோயிற்கு ஏற்றும் விளக்கே" என்று குறிப்பிடுகின்றார். குமார தேவரும் "ஒப்பில் தவத்தர் உளக்கோயிற்கேற்றும் ஞானமணி விளக்கே" என்றுபாடுகிறார் அறிவு எப்படி விளக்காகும் என்ற கேள்வி சாதாரண மக்களிடையே எழும், எழுவது இயற்கை. அதற்கும் விடை காண்போம். ஒரு பாடலுக்குப் பொருள் காணமுற்படும்போது புலப்படாநிலை இருள்எனப்படுகிறது. இருளைத்தான் அறியாமை என்கிறோம். பாடலுக்குப் பொருள் புலப்படும்நிலை அறிவு எனப்படுகிறது. எனவே அறிவு உயிருக்குப் பொருளை விளக்கி உணர்த்துவதால் விளக்கெனப்படுகின்றது. உயிருக்கு ஒரு பொருளைப்பற்றிப் புலப்படாதவாறு செய்வது அறியாமை. ஆதலால் அது இருள் எனப்படுகிறது. எனவே இத்தகைய ஞானத்தைத் தந்தருளும் ஆண்டவனை ஒளி வடிவானவன் என்றுகூறினர். ஆதலால் கண்ணுக்குத்தெரியும் புற ஒளியைப்

போல் அல்லாமல் கருத்துக்குப் புலப்படும் அக ஒளியாக விளங்குபவன் இறைவன் என்று உணர்தல் அவசியமாகும்.

## புறத்தூய்மையும் அகத்தூய்மையும்:

இவ்வகையில் ஒளிவடிவான ஆண்டவன் எழுந்தருளியிருக்கும் இடம் இருள் சூழ்ந்திருத்தல் கூடாது. இறைவனை வழிபடும் இடமும் சூழலும் தூய்மையும் ஒளியும் உடையதாக இருப்பின் அவ்விடத்திலிருந்து வழிபாடு செய்யும் மக்களின் உள்ளங்கள் மகிழ்ச்சியாகவும் பிரகாசமாகவும் இருக்கும் என்பதில் ஐயமில்லை. புறத்தூய்மை இருக்கும் இடத்தில்தான் அகத்தூய்மையும் உண்டாகும். இதனல்தான் அப்பர்பெருமான் இறைவன் எழுந்தருளியிருக்கும் இடங்களைத் தூய்மை செய்பவர்கள், பெரும்பயன்களை எய்துவர் என்று ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார்.

'விளக்கினர் பெற்றஇன்பம் மெழுக்கினல் பதிற்றியாகும
துளக்கினன் மலர்தொடுத்தால் றூயவிண் ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதம்சொன்னர்க்கு அடிகள்தாம் அருளுமாறே"

எனும் இப்பாடலில் திருக்கோயிலைத் திருஅலகினல் பெருக்கி விளக்கித் தூய்மை செய்தவர்கள் பெறும் இன்பத்தில் பத்து மடங்கு அதிகமாக அத்திருக்கோயிலை மெழுகியவர்கள் பெறுவர் என்றும், நன்மலர் தொடுத்துச்சார்த்திப் பூசித்தவர் விண்ணுலகுபெறுவர் என்றும்,திருக்கோவிலின்கண் திருவிளக்கு ஏற்றியவர்கள் ஞானம் பெறுவர் என்றும் இசைப் பாடல்களைப் பாடியவர்கள் பெறும் பேறு அளவில்லாதன என்றும் விளக்குகிறார். எனவே இத்திருக்கோயிலின்கண் பல்வேறு திருப்பணிகளைச் செய்தவர்களும் திருவிளக்கு மற்றும் மின்விளக்கு ஏற்றியவர்களும் நலம்பல பெறுவர் என்பதில் ஐயமில்லை.

## சமத்துவம் சாத்தியமாகுமா ?

இங்கு இவ்விழாவில் வரவேற்புரை கூறிய அன்பர் ஒருவர் எங்கும் எதிலும் சமத்துவம் தேவை எனும் கருத்துப்பற்றிப் பேசினர். இன்று நாட்டு மக்களிடையே இந்த சமத்துவம் எனும் சொல்லும் சமரசம் எனும் சொல்லும் கவர்ச்சியாக மேடைகளில் பேசப்பட்டு வருகின்றன. சமத்துவம் என்பது பற்றி ஆழ்ந்து சிந்தித்தல் அவசியமாகும்.

இன்று எல்லோரும், எல்லாமும் சமமாகப் பெற வேண்டும் என்றே விரும்புகின்றனர். அவ்விருப்பத்தில் ஒன்றும் குறையில்லை. அருளாளராகிய தாயுமானஅடிகள்கூட, 'எல்லோரு

இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றுமறியேன் பராபரமே'' என்று கூறுகின்றார். இறைவனும் எல்லா உயிர்களுக்கும் நலம் கொடுக்கக் காத்திருக்கின்றான். ஆனால் இன்பம் எல்லோருக்கும் சமமாகக் கிடைக்காமைக்குரிய காரணமென்ன என்பதைச் சிந்தித்தல் அனைவரின் கடமையாகும். தாயுமான அடிகளும் ஆண்டவனின் அருள்பிரவாகம் பொங்கித்ததும்பிப் பூரணமாய்ப் பரவியிருக்கிறது ; முகந்துகொண்டு அனுபவிக்க வாருங்கள் ! உலகமக்களே என்று அறைகூவல் விடுக்கின்றார்.

“ காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்; அகண்டா காரசிவ
போகம் எனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப்
[ பூரணமாய்
ஏகவுருவாய்க் கிடக்குதையோ! இன்புற்றிட நாம் இனிஎடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும் செகத்தீரே ''

என்பது அவர் அழைக்கும் பாடலாகும். இவற்றைச் சிந்திக்கும் பொழுது ஓர் உண்மை புலனாகின்றது. எங்ஙனம் கதிரவனின் கிரணங்கள் ஒரே மாதிரியாகப் பொய்கையில் விழுந்தாலும் பக்குவம் வாய்ந்த தாமரை மலர்கள் இன்று மலர்கின்றன; மற்றவை அரும்பாக, போதாக வளர்ந்து நாளடைவில் மலர்கின்றனவோ அதுபோல ஆண்டவனின் அருள் வெள்ளம் ஒரேமாதிரியாக ஓடினாலும் பயன்கொள்ளுவோர் பக்குவத்திற்கு ஏற்ப காலப்போக்கில் வளர்கின்றனர் ; ஒரேகாலத்தில் எல்லோரும் எல்லாம்பெற இயலாதது. இந்நிலைக்குக்காரணம் உயிர்களின் தரவேறுபாடுகளே அன்றி இறைவனின் வேறுபாடு அல்ல.

### உலகம் ஒரு மாதிரி இல்லை :

இந்நிலை ஏன் எனில்? உலகம் முழுமையும் ஒரேமாதிரியான அறிவாளிகளையும் செயல்திறன் உள்ளவர்களையும் பார்த்தல் இயலாது என்பதுதான் விடையாகும். இவ்வேறுபாடுகள் இயற்கையானவையே! ஒருகையின் விரல்கள் அனைத்தும் ஒன்றாயிருத்தலில்லை; உடலின் உறுப்புக்கள் அனைத்தும் ஒரேமாதிரியாக இருத்தல் இயலாது என்பதுபோலவே உலகில் வாழும் மக்களை ஒரேமாதிரியாகக் காணுதலும் இயலாது. எனவே பலவேறு தரப்பட்ட மக்களைக் கொண்ட சமுதாயத்தில் சமரசம் தேவை என்பது பொருத்தமற்றது. அங்ஙனம் எனில் சமத்துவம் என்பது எப்பொழுது கிடைக்கும் என்று சிந்திக்க வேண்டும்.

உதாரணமாக அலுவலகத்தில் புதிதாகப் பணிபுரியச் சேர்ந்த எழுத்தர் பத்துப்பதினைந்து ஆண்டுகள் அனுபவமும்

அதற்குத்தக்க அறிவு வளர்ச்சியும் பெற்றால் அவர் தலைமை எழுத்தராக வருவதற்கு வாய்ப்புண்டு எனவே முடிவில், வளர்ந்தநிலையில் சமத்துவத்தை எதிர்பார்க்கலாமே தவிர ஆரம்பநிலையில் எல்லாம் ஒன்றாக வேண்டும் என்று கூறுவது பொருத்தமில்லை. ஆகவே ஒரே மாதிரியான முயற்சியும் ஒரே மாதிரியான அனுபவ வளர்சிசியும் பெற்றவர்கள் சமமாக இருத்தலை விரும்பலாமே தவிர பல்வேறுபட்ட நிலையிலுள்ள வர்கள் சமத்துவத்தை விரும்புவது சாத்தியமில்லை. இக்கருத்தில் தான் திருவள்ளுவரும், இன்று நாட்டில் செல்வமுடையார்கள் சிலரும் செல்வமற்றவர்கள் பலரும் இருக்கின்றார்களே என்ற கேள்விக்கு விடை கூறுவாரைப் போன்று ஒரு குறள் கூறு கின்றார்.

" இலர் ப்லராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர் "

என்னும் குறளில் முயற்சியுடையவர்கள் சிலரும் முயற்சியற்ற வர்கள் பலரும் இருப்பதே இதற்குக் காரணம் என்கின்றார். இக்கருத்தை இக்காலநிலையோடு இணைத்துப்பார்ப்போம். இக் கோயிலுக்குரிய நிலக் குத்தகையைக்கொடுப்போர் சிலர். கொடுக்காதோர் பலர் எனத் தெரிகிறது.

கொடுக்காத மனநிலை உள்ளவரையும், கொடுக்கின்ற மனநிலை உள்ளவரையும் சமமாக எப்படிக் கருதமுடியும் ? கடமை உணர்ந்து கொடுப்போர் அதற்கேற்ற நற்பலனையும், கடமை உணராது கொடுக்காதவர் அதற்கேற்ற துர்ப்பலனையும் தானேபெறுவர். இதனை எப்படி சமப்படுத்த இயலும்? எனவே நமது ஆதீன ஆதிபரமாசாரியசுவாமிகள் அருளியபடி அவரவர் வினைவழி அவரவர் அனுபவம் கிட்டும். இக்கருத்துக்கள் அனைத்தையும் நன்கு சிந்தித்துப்பார்த்து வேறுபாடுகள் வேறுபாடுகளாகவே இருத்தலைத் தவிர்க்க விரும்புவர்கள் வெறும் உணர்ச்சிவயப்பட்டுப் பேசுவதைத்தவிர்த்து உண்மை யான காரணத்தைக் கண்டுபிடித்து அதன்வழி எல்லோரையும் வாழ நெறிப்படுத்துவார்களாக.

இன்று இத்திருக்கோயிலின்கண் மின்விளக்கு ஏற்றும் இப் புண்ணியப் பணியில் பங்குபற்றிய அன்பர்கள் பலரும் நலம் பல பெற்று நீடுவாழச் செந்தமிழ்ச்சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம.

---

# "கடவுள் இல்லையா? எங்ஙனம் கூற இயலும்?"

'சித்தாந்தப் புலவர்மணி'

திரு. ந. ரா. முருகவேள், M. A., M. O. L.

"கடவுள் இல்லை" என்று சொல்லுவதை, ஒருசிலர் தமக்கே யுரிய நாகரிகப் பாங்காகவும், முற்போக்கு நெறிக் கொள்கை யாகவும் கருதிக்கொண்டு, கடைப்பிடித் தொழுகுவதை நாம் காண்கின்றோம். கடவுளின் பெயரால் போலிக் கயவர்கள் சிலர் உலகிற் புரிந்துவரும் பலவகை முறைகேடுகளையும், தீச் செயல்களையும் கண்டு அறிந்து அருவருப்பு அடைபவர்கள், அதன் விளைவாகக் கடவுள் மறுப்புக் கொள்கையினை மேற் கொள்ளத் தலைப்படுகின்றனர்.

கடவுளை நம்பாமையினாலேயே, ஒருவன் பகுத்தறிவாளனா கவும், முற்போக்கு நெறியாளனாகவும், சீர்திருத்தக்காரனாகவும், ஒழுக்க சீலனாகவும், பிறர்நலம் பேணும் பேருதவியாளனாகவும் ஆகிவிடமாட்டான். கடவுளை நம்புபவர்கள் எல்லாம், பகுத் தறிவற்றவர்களாகவும், பிற்போக்கு வாதிகளாகவும், சீர்திருத்த எதிர்ப்பாளராகவும், ஒழுக்க மற்றவர்களாகவும், சுயநலம் பேணும் கொடியவர்களாகவும் ஆகிவிடமாட்டார்கள்.

உலகில் தோன்றிக் கடவுள் நெறியைப் பரப்பிய சமயச் சான்றோர்கள் அனைவரும், பழுத்த நல்ல பகுத்தறிவாளர்களா கவும், முழுக்கமுழுக்க முற்போக்கு நெறியாளர்களாகவும், சிறந்த தூய சீர்திருத்தக்காரர்களாகவும், உயரிய ஒழுக்க சீலர் களாகவும், பிறர்நலம் பேணும் பெருந்தகையாளர்களாகவும், விளங்கி வந்துள்ளனர். இயேசுநாதர், புத்தர்பெருமான், முகம்மதுநபிகள் போன்ற பண்டைப் பெருஞ் சான்றோர்களும், இராமகிருஷ்ணர், விவேகானந்தர், இராமலிங்கர், காந்தியடிகள் போன்ற இஞ்ஞான்றைச் சான்றோர்களும், கடவுளுணர்வில் தலைசிறந்தோங்கிக், கடவுள் நெறியைப்பரப்பி, உலக மக்களுக்

கெல்லாம் பலப்பல பெருநலங்களைப் புரிந்துள்ளனர். சர் சார்லஸ் எலியட் என்னும் பேரறிஞர்,

"யாராவது கடவுள் இல்லை என்று என்னிடம் கூறினால், இறந்தொழியக்கூடிய, பரமாணுவினும் மிகச் சிறிய, ஓர் அற்ப மனிதன், இவ்வுலகில் ஓர் அணுத் துணைப் பரப்பில், ஒரு நொடிநேர அளவு மட்டுமே வாழ்ந்து கொண்டு, அழகும் வியப்பும் ஒழுங்கு அமைப்பும் நிறைந்து, எல்லையின்றி விரிந்து விளங்கும் பேரண்டத் தொகுதிகளையெல்லாம் நன்கினிது கண்டு உணர்ந்து வைத்துங்கூட, மெய்ப்பிக்கப்பட முடியாத இந்த ஒரு கருத்தை, இத்துணை உறுதியாகக் கொள்ளுதல் எவ்வாறு இயலும்? என்றுதான், நான் வினவுகிறபேன்"

என்று குறிப்பிடுகின்றார். மனிதன் இறந்தொழியும் இயல்பினன்; அணுவினும் மிகச் சிறியவன்; அவனது அறிவும் ஆற்றலும் அற்பமானவை; பரந்துவிரிந்த இவ்வுலகில் ஒரு சிறிய அணு அளவு இடத்திலே அவன் வாழ்கின்றான்; வாழுங் காலமும் ஒரு நொடியளவு நேரமே. இவ்வுலகமோ அழகு மிக்கது; வியக்கத் தக்கது; ஒழுங்கமைப்பு உடையது; எல்லையின்றி விரிந்து விளங்குவது; இந்த உலகம் போன்ற எத்துணையோ பலப்பல அண்டங்கள் உள்ளன. அவைகள் எல்லாம் வானவெளியில் ஒழுங்குபெற இயங்கிக்கொண்டுள்ளன. செய்வோரை இன்றிச் செய்வினை இல்லை. அறிவற்ற சடப்பொருள்கள் தாமே இயங்கா. ஏதோ ஓர் அறிவுப் பெரும்பொருள் இவற்றையெல்லாம் இயக்கி நிற்றல்வேண்டும். இதனையுணராமல், 'கடவுள் இல்லை' என்று சிலர் கூறுவது, அறிவுக்குப்புறம்பான, பொருத்தமற்ற, எவ்வாற்றாலும் மெய்ப்பிக்கப்பட முடியாத, தவறான கூற்றேயாகும் என்று, சர். சார்லஸ எலியட் என்னும் அப் பேரறிஞர் வலியுறுத்துகின்றார்.

"கடவுள் இல்லை" என்றொருவன் கட்டுரைப்பின்,
"சிற்றுணர்வை; கணமே வாழ்வை;
படர்உலகில் அணுஅனையை; பரந்த அண்டப்
பரப்பமைப்பும், அழகும், பண்பும்,

உடனுய இயங்குமுறை ஒழுங்கு வைத்தும்
கண்களிற்கண் டுணர்ந்து வைத்தும்,
தீடனுய்நீ, பொருத்தமில்இத் தெளிவில்உரை
செப்பல்எங்ஙன் ?" என்றே கேட்பேன்! *

— தமிழாக்கம்: ந. ரா. முருகவேள்

ஆதலின் நாம் அனைவரும், 'எந்நிலையில் நின்றாலும், எக்கோலம் கொண்டாலும்', கடவுள் ஒருவர் உண்டு என்று உணர்ந்து கடைப்பிடித்து, வையத்து வாழ்வாங்கு நலமுற வாழ்ந்து மகிழ்ந்து, உய்திபெற முயலுவோமாக!

---

* "If you say 'There is no God,' I can only ask you, how a speck of a mortal, living for a moment, on an atom of an earth, in plain sight of an infinite, universe full of beauty, wonder and design, can confidently hold so improbable a view."

— Sir Charles Eliot

# தருமையாதீனத்துச் செப்பேடுகள்

தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டுத்துறையின் சார்பில் புலவர் செ. இராசு 16—10—82 அன்று தருமையாதீனம் சென்று அங்கிருந்த 13 செப்பேடுகளை முதன்முறையாகப் படிஎடுத்தார்.

ஆதீனத் தலைவர் திருப்பெருந்திரு சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், வரவேற்று, எல்லா ஏற்பாடுகளையும் சிறப்புறச் செய்து செப்பேடுகளைப் படிஎடுக்க அனுமதியளித்ததுடன், படி எடுக்கும் முறைகளை நேரில் கண்டும், செய்திகளைக் கூறக்கேட்டும் பாராட்டினார்கள்.

அங்கு வைத்தீசுவரன் கோயிலைச் சேர்ந்த செப்பேடுகள் 5 திருமுல்லைவாயிலுக்குரியவை 4. விருத்தாசலம், சிதம்புரம் திருநெல்வேலி, திருச்சி ஆகிய தலங்களுக்குரிய செப்பேடுகள் ஒவ்வொன்றும் இருந்தன.

விசயநகர அரசர்கள், தஞ்சை மராத்தியர், புதுக்கோட்டை விசய ரகுநாத தொண்டைமான், அரியலூர் அரசு நிலையிட்ட ரெங்கப்ப மழவராயர், வடகால் இராவுத்த மிண்ட நயினார், தஞ்சைக் குருமூர்த்திநாயக்கர் போன்ற ஆட்சித் தலைவர்கள் வரலாறுகளைக் கூறுவதுடன், தருமையாதீனத்தின் பற்பல வரலாற்றுச் செய்திகள் புதியனவாக அவற்றில் காணக்கிடைக் கின்றன.

இச்செப்பேடுகளில் ஒன்றில் குருமூர்த்தி நாயக்கர் என்ற அரசர் குறிக்கப்பெறுகின்றார். இவர் கி. பி, 1607 இல் விசயநகர அரசின் கீழ், சோழ நாட்டின் ஒரு பகுதியை ஆட்சி செய் துள்ளார் என்ற புதிய தகவல் கிடைத்துள்ளது. இதுவரை எந்த வரலாற்றிலும் குருமூர்த்திநாயக்கர் என்ற தனி அரசர் குறிக்கப் பெறவில்லை. இச்செப்பேட்டிலேயே அவர் முதல் முறையாகத் தெரிய வருகிறார்.

அக்காலக் கப்பல் வாணிகம், ஆலயவழிபாடு, நாட்டுப் பிரிவு, அரசியல் அலுவலர்கள், கடற்கரைத் தொழில்கள், அளவு முறைகள் ஆகியவற்றுடன் இந்து முஸ்லீம் ஒற்றுமை பற்றிய செய்திகளும் உள்ளன.

16, 17, 18, 19 ஆம் நூற்றாண்டின் அரசியல் சமூக பொருளா தார, சமய வரலாற்றுடன் அக்கால மொழி நிலையையும் ஆராய இச்செப்பேடுகள் நன்கு பயன்படும்.

படி எடுக்கும் போது தருமைப் பல்கலைக் கல்லூரி முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர், ஆடுதுறைப் புலவர் திரு. வே. மகாதேவன் ஆகியோர் உடனிருந்து உதவினர். நன்றி,

—தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம், செய்திமலர், 14—11—82

கடிதம்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் பொன்னூர்திருவடிகளுக்கு, வணக்கம்.

சுவாமிகள் என்மீது காட்டிவரும் அன்பையும் ஆதரவையும் இறைவனின் பெருங்கருணையாகவே எண்ணுகிறேன்.

சந்நிதானம் அவர்களின் பொன்னூர் திருவடிகளுக்கு என் வணக்கத்தையும், இதயம் கனிந்த நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சந்நிதானம் அவர்களைச் சந்தித்து ஆசிபெற்ற நிகழ்ச்சியையும், சந்நிதானம் அவர்கள் இலங்கைச் சம்பவம் பற்றி எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளைக் கூறியதைப் பற்றியும் சன்மார்க்க சீலர் திரு மகாலிங்கம் அவர்களிடம் சொன்னேன்.

தலைவர் திரு மகாலிங்கம் அவர்கள் மிகுந்த சந்தோஷப் பட்டார்கள். சந்நிதானம் அவர்கள் ஞானியார் சுவாமிகளைப் போல நாள்தோறும் மக்களைச் சந்தித்து அவர்களிடம் இறை உணர்வை ஏற்படுத்தவேண்டும் என்ற விருப்பத்தைத் தெரிவித்தார்கள்.

தலைவர் திரு. மகாலிங்கம் அவர்களும் சந்நிதானம் அவர்கள் கிருத்திகைதோறும் வைத்தீஸ்வரன் கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கு பத்து நிமிடங்களாவது அருள்ஆசி வழங்கவேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தி சுவாமிகளுக்கு எழுதும்படிச் சொன்னார்கள்.

சுவாமிகள் மூலமாகத் தமிழ்நாட்டில் இறைஉணர்வு மீண்டும்தழைக்கும் நாளைஎதிர்பார்த்துக்கொண்டு இருக்கிறோம்.

இந்தப்பணியை சுவாமிகள்தான் நிறைவேற்ற இயலும் என்றும் பரிபூரணமாக நம்புகிறேன்.

அருட்பெரும்ஜோதி! அருட்பெரும் ஜோதி

தனிப்பெரும்கருணை! அருட்பெரும் ஜோதி!

*17—11—82,* தங்கள் அன்புள்ள,

**பகீரதன்.**

# வாழ்த்து!

**திரு. அரங்க. முத்துமணி**

மாவட்டப்பதிவாளர் (தணிக்கை), தஞ்சாவூர்,

**வெண்பா**

பூவுலகம் போற்றப் புனிதச் செயல்செய்த
நாவுக் கரசரென நற்றெண்டில் — மேவும்எம்
பீடுமிகு சண்முகப் பேர்அண்ணல் பொற்பாதம்
நாடித் தொழுதேன் நயந்து.

**வேறு**

சமயங்கள் எத்தனையோ இருந்திட் டாலும்
சாத்திரங்கள் புராணங்கள் இவற்றில் விஞ்சி
இமயம்போல் நிற்பதுதான் சைவம்; நால்வர்,
இயம்பிட்ட கருத்தெல்லாம் யெடுத்துச் சொல்லி
அமிழ்தாக திருத்தருமை முனிவர் கூறும்
அறிவுரைகள் ஆன்மீகச் செய்தி யெல்லாம்
நமக்காகத் தங்களொரு முறையே யேந்தி
ஞானத்தைத் தரும் " ஞான சம்பந்தத்தில் "

தித்திக்கும் கட்டுரைகள்; தெவிட்டா ஞானத்
தேன்பாகுத் தலையங்கம்; கவிதை மற்றும், யாவும்
முத்துப்போல் இதழ்முழுதும் முறுவல் செய்யும்
முதற்குரவர் திருநாமம் தன்னை யேந்தி
எத்திக்கும் போற்றிடவே நாற்ப தோடே
இரண்டாவ தாண்டினிலே அடியெடுத்து
வைத்திருக்கும் இதழ் தன்னை வாழ்த்துகின்றேன்
வையத்தில் தமிழ்வாழ்க! தருமை வாழ்க!!

# திருமறைக்காடு தலச் சிறப்புக்கள்
## ( வேதாரண்யம் )

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், திருவாசக உரைமணி,

**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.,**

தமிழக வரலாற்றில் சிறப்பிடம்பெற்றநகரம் வேதாரண்யம். தொன்மையான சமய வரலாற்றுச் சிறப்புக்கள் பலவற்ரேடு இந்திய விடுதலை இயக்க வரலாற்றில் உப்புசத்தியாக்கிரகம் நடைபெற்ற பெருமையையும் இந்நகர்பெற்றுள்ளது. இங்குள்ள வேதவனேசுவரர் திருக்கோயில் பழமையும் பெருமையும் உடையது. இந்நகரை அடுத்துள்ள கோடிக்கரைக்காடு அழகு மிக்கது. அகத்தியான்பள்ளி, கோடிக்குழகர்கோயில் ஆகிய தலங்கள் வேதாரண்யத்தின் அருகில் உள்ளன கோடிக்கரைக் கடல் புகழ்மிக்க தீர்த்தகட்டமாகும். தமிழகச் சுற்றுலாத் தலங்களில் ஒன்ருக எண்ணத்தக்க சிறப்புமிக்க இந்நகரம் தஞ்சை மாவட்டத்தில் திருத்துறைப்பூண்டி தாலுக்காவில் கீழைக்கடற் கரையில் அமைந்து விளங்குகிறது.

இத்தலத்தின் பழமையான தமிழ்ப்பெயர் திருமறைக்காடு என்பதாகும். வேதங்கள், காடாக இருந்த இத்திருத்தலத்தில் இறைவனை வழிபட்ட சிறப்பால் இந்நகர் திருமறைக்காடு என்னும் பெயரைப்பெற்றுள்ளது. சோழநாட்டுக் காவிரித்தென் கரைத் தலங்களில் இவ்வூர் 125–வது தலமாக எண்ணப்பெறும். திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞானசம்பந்தப் பெருமானும் வேதங்களால் அடைக்கப்பெற்றிருந்த திருக்கதவுகளைத் தமிழ்வேதமாக விளங்கும் திருமுறைகளைப் பாடித் திறக்கவும் அடைக்கவும் செய்து வழிபட்ட வரலாற்றுச் சிறப்புடையது. அகத்தியருக்கு இறைவன் திருமணக்கோலம் காட்டிய பெருமை உடையது. இத்திருத்தலத்திற்குப் புகைவண்டிகளிலும் பேருந்துகளிலும் வரலாம்.

**வழி :**

மயிலாடுதுறை – காரைக்குடி புகைவண்டி வழியில் திருத்துறைப்பூண்டி – கோடியக்கரை கிளைப்பாதையில் வேதாரண்யம் உள்ளது. புகைவண்டி நிலயத்திலிருந்து மேற்கே ஒருகிலோ மீட்டர்தூரத்தில் ஆலயம் விளங்குகிறது.

திருமயிலாடுதுறை, கும்பகோணம், திருத்துறைப்பூண்டி, மன்னார்குடி, நாகப்பட்டினம் முதலிய நகரங்களிலிருந்து வேதாரண்யம் செல்லப் பேருந்துகள் பல உள்ளன. சென்னையிலிருந்து விரைவுப் பேருந்தும் வேதாரண்யம் வந்துசெல்கிறது.

## தலப்பெருமை :

வேதாரண்யம் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் பெருமை பெற்றது. வேதங்களால் பூசிக்கப் பெற்ற பெருமை உடையது. இராமபிரான் இலங்கை செல்ல வேதாரண்யம், இராமேஸ்வரம், கன்யாகுமரி ஆகியமூன்று இடங்களில் கடலில் அணைகட்டினார் என்பர். அத்தலங்கள் ஆதிசேது மத்தியசேது அந்தியசேது என்று கூறப்படும் அவற்றுள் வேதாரண்யம் ஆதிசேது.

இத்தலம் மறைக்காடு, மறைவனம் சேதுவனம் சத்தியகிரி என்ற பெயர்களால் வழங்கப்படுகிறது. மறைவனம் என்னும் பெயர் மருவி மறைசை என இலக்கியங்களில் வழங்கப்பெறும். கல்வெட்டுக்களில் உம்பள நாட்டுக்குன்றூர் நாட்டுத் திரு மறைக்காடு எனக் குறிக்கப்படுகிறது. என்றும் அழியாத மணல் மலையை உடையதாயிருந்தமையால் சத்தியகிரி எனத்தல புராணத்தில் கூறப்படுகிறது. இம்மலையிலிருந்து வேதநதி தோன்றி கடலோடுகலந்ததால் கடலும் வேதநதி எனப்பெற்றது என்றும் பத்துயோசனை அளவு இந்நதி கடலில் கலந்துள்ளது என்றும்தலபுராணம்கூறும். இராமர் இராவணனைக் கொன்ற கொலைப்பழிதீர இராமேசுரத்தில் இராமநாதரை வழிபட்டது போல இத்தலத்திலும் வழிபாடுசெய்து அருள்பெற்றார். இவரை ஆதிராமர் என்பர். இராமபிரானைப் பற்றியிருந்த வீரஹத்தியைப் போக்கிய விநாயகர் வீரஹத்தி சேதவிநாயகர் என இங்கு விளங்குகிறார். அவர் திருமுன் வீரஹத்தி விலகிய இடமும் உள்ளது. நான்முகன், திருமால், இந்திரன் முதலிய தேவர்கள் வழிபட்ட தலம். அகத்தியருக்குக் காட்டிய திருமணக் கோலத்துடன் பெருமான் மணாளன் என்ற திருப்பெயருடன் விளங்குகிறார். மூலலிங்கத்தின்பின் இறைவன் உமையம்மையோடு விளங்கும் மணவாளத் திருக்கோலம் உள்ளது. விசுவாமித்திரருக்குப் பிரும்மரிஷிப் பட்டம் கிடைத்ததும், திருவிளக்கைத் தூண்டிய எலிக்கு இறைவன் மாவலிச்சக்கரவர்த்தியாகப் பிறக்கும் பேறு நல்கியதும் இத்தலத்தின் சிறப்பு வரலாறுகளாகும்.

அம்பிகைக்குரிய 64 சத்தி பீடங்களில் இத்தலம் சுந்தரி பீடத்தையும், நடராசப்பெருமானின் 61 சபைகளில் தேவசபை

யையும் பெற்றுள்ளது. சப்தவிடங்கத் தலங்களில் ஒன்ருகத் திகழ்வது. நாசிகேது, சுவேதகேது, விசுவாமித்திரர், கௌதமர், மனு, மாந்தாதா, தசரதன், வசிஷ்டர் முதலியோர் வழிபட்டது.

புனிததீர்த்தங்களாகிய வேதாமிர்தம்(ஏரி), வேதநதி(கடல்), மணிகர்ணிகை (குளம்) ஆகிய புனிததீர்த்தங்களை உடையது. அர்த்தோதயம் மகோதயம் முதலிய புண்யகாலங்களில் இந்து சமய மக்கள் பல்லாயிரவர் நீராடும் கோடிதீர்த்தத்தைப்பெற்றுள்ள சிறப்புடையது. திருமுறைகளாலும் தலபுராணங்களாலும் பிற இலக்கியங்களாலும் போற்றிப் புகழப்படும் இத்தலத்தைத் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் விசயநகர மராட்டிய சேதுமன்னர்கள் முதலியோரும் திருப்பணிகள்செய்து சிறப்பு வழிபாடுகள் செய்து அருள்பெற்றுள்ளனர்.

**கோயிலமைப்பு :**

இத்தலத்தை வழிபடவருவோர் முதலில் கோயிலை நான்கு வெளிவீதிகளின் வழியாக வழிபடுதல்சிறப்பு. ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் அவ்வாறே வலம்வந்து வழிபட்டதைப் பெரிய புராணம் கூறுகின்றது. " மண்ணினுர் வலம்செய் மறைக்காடு " எனத் தேவாரமும் இதனைத்தெரிவிக்கும். திருக்கோயில் ஊரின் நடுவே கிழக்குநோக்கி அமைந்துள்ளது. ஐந்து நிலைகளுடன் கூடிய இராஜகோபுரம் கோயிலை அணிசெய்கின்றது. மேற்றிசை வாயிலிலும் இவ்வாறே இராஜகோபுரம் உள்ளது. சுவாமி, அம்பாள் சந்நிதிகள் கிழக்குநோக்கியவை. கோயில் இரண்டு பிராகாரங்களுடன் பெரிய கோயிலாக விளங்குகிறது. கீழைக் கோபுரவாயிலை அடுத்து வெளிப்பிராகாரத்தில் தென்கிழக்குத் திசையில் மணிகர்ணிகை தீர்த்தமும், நவகன்னிகை தீர்த்தமும் உள்ளன.

அடுத்து மக்கள் மகப்பேறு முதலியன வேண்டி வலம்வரும் வன்னிமரமும், விசுவாமித்திரக்கிணறும், திருமடைப்பள்ளியும், நந்தவனமும் உள்ளன. மேலைப்பிராகாரத்தில் சேர சோழ பாண்டியர்தாபித்துவழிபட்ட சிவலிங்கக்கோயில்களும் மேலைக் கோபுரமும் அதை அடுத்து பிரமகத்தி மேடையும் விரகத்தி விநாயகர், மேலைக்குமாரர் சந்நிதிகளும் உள்ளன. வடக்குப் பிராகாரத்தில் அம்பாள் கோயில் தனி அமைப்புடன் விளங்குகிறது. அம்பாள் கோயிலுக்குள் கன்னிமூலையில் விநாயகர் கோயிலும் வாயுமூலையில்முருகன்கோயிலும் உள்ளன. அம்பாள் கோயிலுக்கு எதிரே பதினாறுகால்மண்டபம், ஊஞ்சல் மண்டபம் முதலியன உள்ளன. விசுவநாதர் தனிக்கோயிலில் எழுந்தருளியுள்ளார். தலமரம் புன்னை இங்குள்ளது.

இரண்டாம் கோபுர நுழைவாயில் மண்டபத்தைக்கடந்து உட்பிராகாரத்தை அடைந்து வலமாக வரும்போது கிழக்கே தியாகேசரை வணங்கியவாறு சுந்தரர் பரவையாரோடு எழுந் தருளியுள்ளதைக்காணலாம். அடுத்து பிட்சாடனர், அர்த்தநாரீ சுவரர் முதலியோர் திருவுருவங்கள் உள்ளன. தெற்குத் திருமா ளிகைப்பத்தி மண்டபத்தில் அறுபத்துமூவர் எழுந்தருளியுள் ளனர். மேற்குப்பிராகாரத்தில் திருமாளிகைப்பத்தியையடுத்துக் கன்னிமூலையில் கன்னிவிநாயகர், வேதவனப்பிள்ளையார். அடுத்து, காட்சிகொடுத்தநாயனர், சந்திரசேகரர், முருகன், மகா லக்ஷ்மி சந்நிதிகள் உள்ளன. வடக்குப் பிராகாரத்தில் சனீசுரர், சரஸ்வதி, அன்னபூரணி, துர்க்கை சந்நிதிகள் உள்ளன. இத் தலத்தில் தெற்குநோக்கி விளங்கும் துர்க்கை சிறப்புடைய தெய்வமாகப் பலராலும் வழிபடப்படுகிருர். அடுத்து நடராசர் சபை உள்ளது. கிழக்கே நவக்கிரகங்கள் வக்ரமின்றி உள்ளனர். சுவாமிகோயிலும் தியாகேசர்கோயிலும் இணைந்து இருபெருங் கோயில்களாக விளங்குகின்றன. சுவாமிகோயில், கர்ப்பக் கிரகம், அர்த்தமண்டபம், ஸ்நபனமண்டபம், மகாமண்டபம், ஆஸ்தானமண்டபம் முதலியவற்ருேடு அழகுற விளங்குகிறது. அறுபத்துமூவர் பஞ்சமூர்த்திகள் முதலிய திருவுலாநாயகர்கள் மகாமண்டபத்தில் உள்ளனர். அவர்களை வழிபட்டு சுவாமி சந்நிதியை அடைந்து, மறைக்காட்டுறையும்மணுளரைவழிபட்டு தியாகேசர் சந்நிதியை அடையலாம்.

இத்தலத்தில் விளங்கும் தியாகர் புவனிவிடங்கத்தியாகர் எனப்பெறுவார். பீடம் - இரத்தின சிம்மாசனம். நடனம் - ஹம்சநடனம், விடங்கர்-மரகதலிங்கவடிவமாகவிளங்குவதைத் தரிசிக்கலாம். அம்பிகை யாழைப்பழித்தமொழியம்மை (வீணு வாதவிதூஷணி). பலரும் பிரார்த்தனைகள் செய்து வழிபடும் அருள் நலமுடையவராய் விளங்குகிருர். தரிசித்து மகிழலாம்.

**மூர்த்திகள் :**

வீரஹத்திசேதவிநாயகர். இவர் மேலைக்கோபுர நுழை வாயிலில் மேற்கு நோக்கிவிளங்குகிருர். இத்தலத்தில் முதன் முதலில் வழிபடத்தக்க மூர்த்திஇவர். இராமபிரானைத்தொடர்ந்து வந்த வீரஹத்திப் பாவத்தைப் போக்கியதால் இப்பெயரோடு விளங்குகின்ருர். வீரகத்தி விலகிய இடம் முன்னுல் உள்ளது.

**வேதாரண்யேசுவரர் :**

இத்தலத்து மூலமூர்த்தியின் திருப்பெயர் ஸ்ரீ வேதாரண் யேசுவரர் என்பதாகும். இவர் வேதநாயகர் வேதவனேசர் மறைக்காட்டீசர், என்றபெயர்களாலும் வழங்கப்பெறுவார்.

கல்வெட்டுக்கள் வேதவனமுடையார்வேதவனமுடையநாயனர் என்ற பெயர்களால் குறிப்பிடுகின்றன.

**மறைக்காட்டுறையும்மணாளர் :**

இவர் மூலஸ்தானத்தில் வேதவனேசருக்குப் பின்னே உருவத்திருமேனி கொண்டு உமையம்மையோடு மணவாள கோலத்தில் விளங்குகிருர். இவரை அப்பர்சுவாமிகள், 'மலே யார்தம் மகளோடு மாதேவன் சேரும்மறைக்காடு 'எனப்போற்று கிருர். அகத்தியருக்காட்சி தந்த திருக்கோலம்.

**வீணாவாதவிதூஷணி :**

வடமொழியில் வழங்கும் அம்மையின் திருப்பெயர் இது. தமிழில் யாழைப்பழித்த மொழி உமையாள் என வழங்குவர். சுந்தரர் 'யாழைப்பழித்தன்ன மொழிமங்கை யொருபங்கன்' என அம்மையின் பெயரைக் குறிப்பிடுதல் காணத்தக்கது. பெருமானுக்கு இடது பக்கம் அம்மை விளங்கும் அமைப்பில் கோயிலும் உள்ளது.

**தியாகேசர் :**

முசுகுந்த மன்னனுக்கு இந்திரன் அளித்த ஏழு தியாகேச மூர்த்திகளில் ஒருவர். இவர் இயற்றும் நடனம் அம்ச நடனம் எனப்படும் அம்சம் – அன்னம். அன்னம்போல மெதுவாக அடி எடுத்து அசைந்தாடும் மூர்த்தி இவர். பீடம் – இரத்தின சிம்மா சனம் எனப்படும். தியாகர் சந்நிதியிலுள்ள விடங்கர் புவனி விடங்கர் எனப்பெறுவார். மரகதத் திருமேனி.

**துர்க்கை :**

இத்தலத்தின் சிறந்த வழிபாட்டுத் தெய்வம் இவர். பில்லி சூனியம் முதலிய குற்றங்கள், கிரகக்கோளாறுகள் முதலிய குறைகளேப் போக்கியருள்பவராகவும் பலரது குலதெய்வ மாகவும் இவர் விளங்கிவருகிருர். அன்பர்கள் பலரது பிரார்த் தனேகளே நிறைவேற்றிவரும் இவ்வம்பிகை சந்நிதி இத் தலத்தில் மிக்க சிறப்போடு விளங்குகிறது.

**நடராசர் :**

இம்மூர்த்தி இறைவனது சிறப்பான பதினெட்டு நடனவகை களில் ஒன்று எனக்கூறப்படுகிறது. அழகானமூர்த்தி. இவர் எழுந்தருளிய சபை தேவபக்த சபை எனப்படும்.

**காட்சிகொடுத்தநாதர் :**

இத்தலத்திலுள்ள பழமையும் பெருமையும் வாய்ந்த மூர்த்தி களில் ஒருவர் இவர். புன்னகையுடன் வலதுகையை இடபத்தின்

தலையில் ஊன்றி இடதுகையை தொடையில் வைத்து நிற்கும் இவரதுதிருக்கோலம் கண்டோர் உள்ளங்களைக் கவரும் அழகை உடையது.

**சந்திரசேகரர் :**

விழாக்காலங்களில் தியாகேசர் புறப்படாத நாட்களில் திருவீதி வலம் வரும் மூர்த்தி இவர். தியாகேசருக்குப் பதிலாக இவருக்குப் பட்டம்கட்டும் நாளைச் சந்திரசேகரப்பட்டம் எனக் கூறுவர். ' பட்டங்கட்டிய சென்னிப்பரமர் ' எனத்தேவாரத்தில் இம்மூர்த்தி குறிக்கப்படுகிறுர்

**தலமரம் :**

வன்னியும் புன்னையும், இத்தலத்துக்குரிய புனித மரங் களைாப் போற்றப்படுகின்றன. சுவாமி சந்நிதியில் வன்னியும் அம்பாள் சந்நிதியில் புன்னையும் உள்ளன. இவை மிகப்பழமை யான தெய்வீக மரங்களாகும் வன்னி அகத்தியர் விசுவாமித்திரர் தங்கித் தவம் செய்த சிறப்புடையது. புன்னை நசிகேது, சுவேது கேது முதலியோர் தங்கித்தவம் செய்தது. மகப்பேறு முதலியன விரும்புவோர் முறையே சங்கல்பம் செய்துகொண்டு வேத தீர்த்தம் வேதநதி மணிகர்ணிகையில் நீராடி வன்னி மரத்தை நூற்றெட்டு முறை வலம்வந்து. பெருமானுக்குச் சிறப்பு வழி பாடுகள் நிகழ்த்தி, குழந்தைகட்கு ஆடை தின்பண்டங்கள் வழங்கினுல் நன்மைகள் பலவும் எய்திடக் காணலாம்.

**தீர்த்தங்கள் :**

இத்தலத்தில் 96 தீர்த்தங்கள் உள்ளன. சிறந்தவை மணி கர்ணிகை, விசுவாமித்திரதீர்த்தம், வேதாமிர்ததீர்த்தம், வேதநதி (கடல்) கோடிதீர்த்தம் (கோடிக்கரைகடல்) என்பன. ஆடி, தை அமாவசைகளிலும், சிவராத்திரிதினத்திலும், புரட்டாசி மகாளய பக்ஷத்திலும், மார்கழி வியதீ பாதத்திலும், வைகாசி, ஐப்பசி, கார்த்திகை, மாசி மகம், பங்குனி, உத்திரம் முதலிய பௌர்ணி மைகளிலும், கிரகணங்களிலும் விதிப்படி இத்தீர்த்தங்களில் நீராடுவோர் இம்மை மறுமைப் பயன்களை எய்துவர். மணிகர்ணி கையில் காசக்கங்கை வந்துசேர்வதாகவும் அப்போது நீராடு வோர் காசிக்கங்கை நதியில் மணிகர்ணிகைக் கட்டத்தில் நீராடிய பயனைப்பெறுவர் எனவும் கூறப்படுகிறது.

**அர்த்தோதயம், மகோதயம் :**

இவை பல ஆண்டுகட்கு ஒருமுறை வரும் புண்ணிய காலங்கள். வியதீபாதத்தின் நான்காம்பாதமும், அமாவாசையின் முதற்பாதமும், திருவோண நட்சத்திரத்தின் நடுப்பாகமும்

ஞாயிற்றுக்கிழமை உதயகாலத்தில் கூடியிருந்தால் அதனை அர்த்தோதயம் எனவும் அவை திங்கட்கிழமை உதயகாலத்தில் கூடியிருந்தால் அதனை மகோதயம் எனவும் கூறுவர். இந்நாட்களில் கங்கை, காவிரி முதலிய புண்ணிய நதிகள் கடலொடு கலக்கும் சங்கமத்துறைகளிலும் வேதாரண்யம் கோடியக்கரை, இராமேசுவரம் தனுக்கோடி ஆகிய புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடிப் பிதிர்க்காரியங்கள் தானங்கள் செய்தல் பெரும்பயனைத் தரும் எனவும் கூறப்படுகிறது.

### சூழ உள்ள தலங்கள் :

வேதாரண்யத்திலிருந்து கோடியக்கரை செல்லும் சாலையில் தேவாரப்பாடல் பெற்ற அகத்தியான்பள்ளியும் கோடிக்குழகர் கோயிலும் உள்ளன. கோடியக் காட்டுத் தொடக்கத்தில் ஸ்ரீராமர்பாதம் என்னுமிடம் உள்ளது. இது இராமபிரான் சேது பந்தனம் செய்ய நின்று பார்த்த இடம் எனக் கூறப்படுகிறது.

### முசுகுந்தன் தியாகேசரைப் பிரதிட்டைசெய்தது :

முசுகுந்தன் முற்பிறவியில் குரங்காகஇருந்து இப்பெருமானை வில்வார்ச்சனைசெய்து வழிபட்ட சிறப்பால் குரங்குமுகத்துடன் சோழமன்னனாகப் பிறக்கும் பேற்றைப் பெற்றவன். வலாசுரனோடு இந்திரன் போரிட்டபோது இந்திரனுக்குத் துணைப்படை அனுப்பி வெற்றிபெறச் செய்தமைக்காக முசுகுந்தனை வாழ்த்திப் பரிசுகள் அளிக்க விரும்பினான் இந்திரன். விரும்பியதைக் கேட்குமாறு கூறிய இந்திரனிடம் அவன்வழிபடும் தியாகேசர் திருவுருவத்தைக் கேட்டான் முசுகுந்தன். திருமாலிடம்தான் பெற்று வழிபட்டுவரும் அம்மூர்த்தியைக்கொடுக்க மனமின்றி இந்திரன் தான்வழிபட்டு வந்த தியாகேசர் போல மற்றும் ஆறு திருவுருவங்களைப் படைத்து ஏழு திருவுருவங்களையும் காட்டி விரும்பிய தொன்றை எடுத்துக்கொள்க என்றான்.

தியாகேசர் அமரர் நாடாளாது ஆரூர் ஆளத்திருவுளம் கொண்டார். முசுகுந்தனுக்குத் தன் திருவுருவ அடையாளங்களைத் தெரிவித்தருளினார். முசுகுந்தன் இறையருளால் இந்திரன் வழிபட்ட தியாகேசரையே சுட்டிக்காட்டிக் கேட்டனன். இந்திரன் வேறுவழியின்றி ஏழு தியாகேசர்களையுமே முசுகுந்தனுக்குப் பரிசுகளாக வழங்கி வழியனுப்பினான். முசுகுந்தன் அவற்றைப் பெற்றுத் தமிழ் நாடடைந்து இந்திரன் வழிபட்ட தியாகரைத் திருவாரூரிலும், ஏனையமூர்த்திகளைத் திருமறைக்காடு, நாகை, நள்ளாறு, காறாயில், வாய்மூர், கோளிலி ஆகிய ஆறு தலங்களிலும் தாபித்து வழிபட்டான். இவ்வேழு தலங்களும்

சப்தவிடங்கத் தலங்கள் எனப்படும். சப்தவிடங்கத் தலங்களைப் பின்வரும் வெண்பா தெரிவிக்கும்.

சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் — பேரான்
ஒத்த திருவாய்மூர் உகந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்.

ஏழு தியாகேசருக்கும் ஏழு பெயர்களும் ஏழுவகை நடனங்களும் கூறப்படுகின்றன. திருவாரூர் - வீதிவிடங்கர், அஜபா நடனம். திருநாகை - சுந்தரவிடங்கர், பாராவாரதரங்க நடனம் திருநள்ளாறு-நகவிடங்கர், உன்மத்தநடனம். திருமறைக்காடு-புவனிவிடங்கர், ஹம்சபாதநடனம். திருக்காறாயில் - ஆதி விடங்கர், குக்குடநடனம். திருவாய்மூர் - நீலவிடங்கர், கமல நடனம். திருக்கோளிலி - அவனிவிடங்கர், பிரமர நடனம்.

## முத்தித் தலங்கள் :

தருமைஆதீனஸ்தாபகர் ஸ்ரீலஸ்ரீகுருஞானசம்பந்தர் முத்தித் தலங்களைத் தொகுத்துக்கூறும் சிவபோகசார வெண்பாவில் இத்தலத்தையும் குறிப்பிட்டு அருளியுள்ளார். இப்பாடலில் குறிப்பிடப்பெறும் தலங்களின் பெயர்களைச் சொன்னாலே முத்தி சித்திக்கும் என அவர் கூறுகிறார்.

தில்லைவனம் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் கூடல் முதுகுன்றம்—நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும்.

## அகத்தியருக்குத் திருமணக்கோலம் :

திருக்கயிலாயத்தில் உமையம்மையைப் பிரிந்து யோகநிலையில் இருந்த சிவபெருமான் தேவர்களின்துயர்துடைக்க முருகப் பெருமானைத்தரற்பொருட்டு இமவான் மகளாகப் பிறந்து தவம் இயற்றிய உமையம்மையைத் திருமணங்கொள்ள இமயமலைக்குத் தேவர்கள் முனிவர்கள்புடைசூழ எழுந்தருளினர். இறைவன் பார்வதிதேவியைத் திருமணங்கொள்ளும் இனிய விழாவைக் காண எல்லாப்புவனங்களிலுள்ளவர்களும் கூடினமையால் இமயமலை நடுங்கியது. பூமியின் வடபகுதி தாழ்ந்து தென்பகுதி உயர்ந்தது. இறைவன் பூமியைச் சமன்செய்யவும், செருக்குற்ற விந்தமலையை அடக்கவும் விரும்பி திருநந்திதேவர்மூலம் அகத்தியரை அழைப்பித்தார். அகத்தியரும் வந்து வணங்கிநின்றார். இறைவன் அகத்தியரைநோக்கி 'வடதிசைதாழ்ந்தும் தென்திசை உயர்ந்தும் நிலவுலகம் பிறழ்ந்துள்ளதால் உயிர்கள் அஞ்சுகின்றன. இதனைச் சமன்செய்தற்பொருட்டுப் பொதியமலையிற்

சென்று தங்குக' எனப்பணித்தார். இறைவனது திருமணக் கோலத்தைக்காண இயலாமற்செல்லநேர்கிறதே என அகத்தியர் வருந்தியபோது சிவபெருமான் 'தென்னுடுவந்து நமதுதிருமணக் கோலத்தை உமக்குக்காட்டியருளுவோம்' எனத் தேற்றி அனுப் பினுர். அகத்தியரும் இறைவனிடம் விடைபெற்று விந்தமலே யின் செருக்கினே அடக்கிப் பல தலங்களேயும் வழிபட்டுக் கொண்டு திருமறைக்காடுவந்தார். இறைவன் அவருக்கு இத் தலத்தில் தமது திருமணக்கோலத்தைக்காட்டி அருள்புரிந்தார். மூல இலிங்கமாகவிளங்கும் பெருமானுக்குப்பின்னுல் இறைவன் பார்வதிதேவியோடு திருவுருவந்தாங்கி அகத்தியருக்குத் திரு மணக்காட்சி நல்கியதை அனேவரும் தரிசிக்கலாம். அகத்திய ருக்கு மணவாளராகக் காட்சி நல்கியதால் பெருமான் மறைக் காட்டுறையும் மணுளன் எனத் திருமுறைகளில் போற்றப்பெறு கிறுர். அகத்தியர் தங்கித் தவமியற்றி வழிபட்ட திருக்கோயில் அகத்தியான்பள்ளி என வழங்குகிறது. இத்தலம் வேதாரண்யத் துக்குத் தென்பால் உள்ளது.

### மறைக்கதவு திறக்கவும் அடைக்கவும் பாடியது :

திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் திருவீழிமிழலேயி னின்றும் புறப்பட்டுத் திருவாஞ்சியம் முதலிய திருத்தலங்களே இறைஞ்சிப் போற்றித் திருமறைக்காட்டை அடைந்து கோயிலே வலம்வந்து பண்டைநாளில் வேதங்கள் வழிபட்டு அடைத்துச் சென்ற திருக்கதவம் அமைந்த திருவாயிலே அடைந்தார்கள். முன்னுளில் அடைக்கப்பட்ட அக்கதவுகள் வேதங்களில்வல்ல அன்பர் ஒருவரும் வாராமையால் நெடுநாள் திறக்கப்படாமலே இருந்தது. அதனுல் திருமறைக்காட்டில் வாழும் மக்களும் பிற அன்பர்களும் வேருெரு வாயிலமைத்துக்கொண்டு சென்று வேதவனப்பெருமானே வழிபட்டுவந்தனர். இதனே அறிந்த திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசரைநோக்கி, 'அப்பரே நாம் எப்படியும் நேர்முகமாகவுள்ள இத்திருவாயிலின்வழியேசென்று மறைக்காட்டு இறைவரை வழிபடவேண்டும். ஆதலால் இத் திருக்கதவு திறக்கும்படி நீவிர் திருப்பதிகம் பாடியருள்வீராக' என வேண்டினுர். ஞானசம்பந்தப்பிள்ளேயாரின் விருப்பத்திற்கு இணங்கித் திருநாவுக்கரசர் 'பண்ணினேர்மொழியாள்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளினுர். செந்தமிழ்ப் பாடல்களாகிய அப்பதிகப் பாடல்களின் சுவைநலங்களேத் துய்க்க விரும்பிய மறைக்காட்டிறைவர் திருக்கதவு திறக்குமாறு செய்யக் காலந்தாழ்த்தியருளினுர். தமது வேண்டுகோட்கு இணங்கிப் பத்துப் பாடல்கள் பாடியும் இறைவன் திருக்கதவு திறந்தருளாமையைக்கண்டு வருத்தமுற்ற அப்பர் 'இராவணனே

விரலால் அடர்த்திட்டநீர் ஒருசிறிதும் இரக்கமில்லாதவர்தானே" எனக்குறிப்பிட்டுத் திருக்கடைக்காப்புச் செய்யுளைப் பாடத் தொடங்கினர். அந்நிலையில் பன்னெடுநாள் அடைத்திருந்த அக்கதவுகள் இறைவனருளால் திறக்கப்பெற்றன.

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் நிலமிசை வீழ்ந்து இறைஞ்சி நேர்முக வாயில் வழியேசென்று திருமறைக் காட்டுறையும் மணாளனைப் போற்றிப்பாடி வழிபட்டனர் இருவரும் வழிபாடுமுடித்து மீண்டும் வெளியே வந்தபோது அப்பர் ஞானசம்பந்தரைநோக்கி இத்திருவாயிற் கதவுகள் இனித்திறக்கவும் அடைக்கவும்வரும் நிலையில் இப்போது இவ்வாயிற் கதவுகள் அடைத்திடும்படிப் பாடியருளும் என வேண்டினர். அது கேட்ட பிள்ளையார் 'சதுரம்மறை' எனத் தொடங்கும் திருப்பதிகத்தில் முதற்பாடலைப்பாடியருளினர். இறைவனருளால் முதற்பாடலிலேயே கதவு அடைக்கப் பெற்றது. இருவரும் பெருமானருளை எண்ணிவியந்து வாழ்த்திமகிழ்ந்தனர். ஞானசம்பந்தர் எடுத்த திருப்பதிகத்தைத் தொடர்ந்து பாடித் திருக்கடைக் காப்புச்சாத்தியருளினர். ஞானசம்பந்தரும் அப்பரும் அடியவர் குழாங்களோடு அங்குள்ள மடத்திற் சென்று தங்கினர்.

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியால்
திணியன நீள்கதவந் திறப்பித்தன தெண்கடலிற்
பிணியன கன்மிதப்பித்தன சைவப்பெரு நெறிக்கே
அணியன நாவுக்கரையர்பிரான் தன் அருந்தமிழே.

### அப்பரின் மனக்கவலை :

அப்பர் தாம் அரிதில் திறக்கப்பாடிய தன்மையையும், ஆளுடைய பிள்ளையார் விரைவில் அடைக்கப்பாடிய இயல்பையும் எண்ணி இறைவர் காலந்தாழ்த்து தமக்கு அருள் செய்தற்குக் காரணம் அவரது திருவுளக் குறிப்பையான் உணராது அயர்த்தமையே எனக்கவலையுற்ற மனத்தினராய் அத்திருமடத்தின் ஒருபால் துயில்கொண்டார். இறைவன் அப்பர் கனவிலேதோன்றி 'நாம் திருவாய்மூரில் இருப்போம் வருக' எனக்கூறிமுன்னேசெல்ல அந்நிலையில் விழித்தஅப்பரும் 'எங்கே என்னை' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடிக் கொண்டு திருமறைக்காட்டைக் கடந்து வாய்முருக்கு ஏகினர். இறைவன் வாய்முருக்குச் சென்றதும் பொற்கோயில் ஒன்றைக் காட்டி அதனுட் சென்று மறைந்தருளினர். இந்நிலையில் திருமறைக்காட்டுத் திருமடத்தில் காலையிலெழுந்த திருஞான சம்பந்தர் நாவுக்கரசர் வாய்மூர் சென்றுள்ளார் என்பதைக் கேள்வியுற்றுத் தாமும் அவரைத் தொடர்ந்து வாய்மூர் சென்றார்-

அப்பர், ஞானசம்பந்தர் வருகையைஅறிந்து இறைவனைநோக்கி எனக்கு உமது திருக்கோலத்தை மறைத்தாலும் ஞானசம்பந்தருக்கேனும் அக்காட்சியை மறைக்காமல் காட்டியருளுமாறு.

திறக்கப் பாடிய என்னினும் தீந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தா ருந்நின்றூர்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே.

என்று பாட இறைவன் ஞானசம்பந்தருக்குத் தமது ஆடற் கோலத்தைக்காட்டியருளினார். ஞானசம்பந்தர் கண்டுவழிபட்டு அக்காட்சியை அப்பர் கண்டு மகிழுமாறும் செய்தருளினார். இருவரும் இறைவனது திருக்காட்சியைக் கண்டுமகிழ்ந்து திருப் பதிகங்கள் பாடிச் சிலநாட்கள் இருவரும் திருவாய்மூரில் தங்கியிருந்து மீண்டும் இறைவனைவணங்கி விடைபெற்றுத் திருமறைக்காட்டுக்கு எழுந்தருளினர்.

### பாண்டிமாதேவி தூது :

அப்போது பாண்டியநாட்டில் சமணசமயம் மேலோங்கியிருந்தது. சைவ சமயம் நிலைகுன்றியிருந்தது. பாண்டிய மன்னன் நின்றசீர்நெடுமாறன் சமண சமயத்தைச் சார்ந்து அவர்கள் சொற்படிஒழுகிவந்தான். சைவசமயத்தில் உறுதியான பற்றுக் கொண்டிருந்த அம்மன்னனது மனைவியார் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் சைவசமயம் மீண்டும் தென் பாண்டி நாட்டில் தழைத்தோங்கத் திருஞானசம்பந்தப் பெருமானை மதுரை மாநகருக்கு எழுந்தருளச்செய்ய வேண்டுமெனவிரும்பினார். தூதர்சிலரைத் திருமறைக்காட்டுக்குஅனுப்பி நாட்டு நிலையையும், சமய நிலையையும் அவரிடம் விண்ணப் பிக்கச்செய்தனர். திருஞானசம்பந்தர் மதுரைசெல்லத் திருவுளங் கொண்டு புறப்பட்டருளினார்.

அப்போது அப்பர்பெருமான் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை அணுகிச் சமணர்கள் மிக்க வஞ்சனையுடையவர்கள், அவர்கள் எனக்குச்செய்த தீங்குகள் பலவாகும் மேலும் இன்று நாளும் கோளும் நன்றாக இல்லை. இந்நிலையில் தேவரீர் எழுந்தருளுவது தக்கதன்று என்று தடுத்தருளினார்.

அதுகேட்டபிள்ளையார் திருநீற்றினைப்போற்றும்மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும் காணும் விருப்புடையேன். அமணர் வன்மையைச் சிதைத்துச் சிவநெறியை நிலைநிறுத்தியன்றி வேறுசெயலை மேற்கொள்ளேன். நும்மீது ஆணை எனக் கூறி "வேயுறுதோளிபங்கன்" என்று தொடங்கும் கோளறு திருப்பதிகத்தை அருளிச் செய்துகொண்டு தம்முடன் வரமு

பட்ட அப்பரைத் தடுத்து விடைகொண்டு பாண்டிநாட்டிற்குப் புறப்பட்டருளினர். பின்பு திருநாவுக்கரசரும் திருமறைக்காட்டீசுவரரை வணங்கி நாகை முதலிய தலங்களை வணங்கச் சென்றருளினர் என்பது பெரியபுராணத்தில் காணப்படும் வரலாறாகும்.

### சேரமான்பெருமாளுடன் சுந்தரர் :

சுந்தரர் சேரமான்பெருமாள் நாயனருடன் இணைந்து பல சிவதலங்களையும் தரிசிக்க யாத்திரை மேற்கொண்டு திருவாரூரிலிருந்து திருமறைக்காடுவந்து அப்பரும் ஞானசம்பந்தரும் திறக்கவும் அடைக்கவும் பாடியசிறப்புக்களை நினைந்துபோற்றிப் பின் அகத்தியான்பள்ளி கோடிக்குழகர் முதலியதலங்களைப் பணிந்து பின்னர்மதுரைசென்றருளினர் எனப் பெரியபுராணம் இத்தலத்தில் சுந்தரர்வந்து தரிசித்த சிறப்பைக் கூறுகிறது.

### திருப்பணி :

பண்டைப் பெருமைகள் பலவும் வாய்ந்த இத்திருக்கோயிலைப் பெரும்பொருட்செலவில் திருப்பணிகள் பலவும் செய்வித்து மகாகும்பாபிஷேம் செய்விப்பது சைவப் பெருமக்களின் தலையாய கடமையாகும். இறைவன் உறையும் திருக்கோயிலைத் திருப்பணிகள் செய்வோர்க்கு விளையும் சிவ புண்ணியப் பயனை,

> புல்லினல் கோடியாண்டு புதுமண்ணல் பத்துக்கோடி
> செல்லுமா ஞாலந்தன்னில் செங்கல்லால் நூறுகோடி
> அல்லியங் கோதைகேளாய் அரனுறை ஆலயத்தைக்
> கல்லினல் செய்விப்போர்கள் கயிலைவிட் டகலாரன்றே.

என்ற பாடல் சிறப்பித்துக் கூறுகிறது.

### அரசின் ஆதரவு :

புயல், கடல்கொந்தளிப்புக் காலங்களில் இத்திருக்கோயில் வேதாரண்யம்மக்களுக்குப் புகலிடமாகவிளங்குகிறது. கடலின் சீற்றத்தை இத்திருக்கோயிலில் உள்ள இறைவனது அருட்பிரசாதம் தணித்து வருவதைத் திருமறைக்காட்டு மக்கள் நன்கு உணர்வார்கள். உப்பு, புகையிலை முதலிய தொழில் வளத்தால் சிறந்துள்ள இந்நகரினை வளப்படுத்துவதும், கோயில் திருப்பணிகளுக்குப் பேருதவி செய்வதும் அரசினரின் கடமையாகும்.

கட்டுரை எண். 33

# அபிராமி அந்தாதி

புலவர். திரு. K. சந்தானராமன், M A., B. Lit,
D. P. P. A,. D. U. N., I. U.

**ஆசைக் கடலில் அகப்பட்டு அருளற்ற அந்தகன்கைப்
பாசத்தில் அல்லற்பட இருந்தேனை, நின்பாதமென்னும்
வாசக் கமலம் தலைமேல் வலியவைத் தாண்டு கொண்ட
நேசத்தை என்சொல்லுவேன்? ஈசர் பாகத்துநேரிழையே!**

**அ. ஈசர் பாகத்து நேரிழையே!**

(1) "இறைவனின் இடப்பாகத்தில் வீற்றிருக்கின்ற நுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த திருவாபரணங்களை அணிந்தவளே" என அழைக்கிருர்.

(2) 'நேரிழை' என்ருல் நுண்ணிய வேலைப்பாடுகள் பொருந்திய அணிகலனைக் குறிக்கும். இங்கு அவற்றினை அணிந்த அன்னைக்கு ஆகிவந்த அன்மொழித் தொகை என்பர் இலக்கண நூலார். மிகவும் எளிமைப்படக் கூறினல் பின்வரு மாறு கூறலாம். 'மில்' துணியாலான 'ஜிப்பா' அணிந்தவரை 'மல்லு ஜிப்பா' என்றும் 'சரிகை' வேட்டி கட்டியவரை 'சரிகை வேட்டி' என்றும் அழைக்கிருேம் அல்லவா? அது போன்றதுதான், நேர்த்தியாக இழைக்கப்பட்ட அணிகலன் அணிந்தவளை 'நேரிழையே' என்பதும்.

(3) அம்பிகையின் அலங்கார அணிகலன்களைக் குறிப் பிடும் நூல்கள், கிரீடம், தாடங்கம், பதக்கம், நாஸாபரண மென்னும் மூக்குத்தி, மாங்கல்யம், வளையல்கள், மாலைச்சரங்கள், காஞ்சி என்னும் இடையணி அல்லது மேகலை, கேயூரம், அங்கதம், அங்குலீயம், நூபுரம், பாதாங்குலீயம் ஆகிய பல அணிகலன்களைக் குறிப்பிடுகின்றன. சகஸ்ரநாமமும் பல அணிகலன்களைக் குறிப்பிட்டு நிறைவாக 'சர்வாபரணபூஷிதா' – எல்லா அணிகலன்களும் அணிந்தவள் எனவருணிக்கிறது.

அந்த நேரிழையை "ஈசர் பாகத்து நேரிழையே!" என இப்பாடலில் அழைப்பதில் உட்குறிப்பொன்றும் நயமும்

அடங்கியிருக்கிறது. இப்பாடலின் விளக்கவுரையின் முடிவில் அதனை அறிய மிகவும் சுவைதரும்.

## ஆ. ஆசைக்கடலில் அகப்பட்டு... அல்லற்படவிருந்தேன்

(1) ஆசையாகிய கடலில் சிக்கி, கருணை என்பது சிறிதுமில்லா எமனின் பாசத்தால்துன்பப்பட இருந்தேன். ( இப்போது அது நீங்கிவிட்டது ).

(2) ஆசைக்கோர் அளவில்லை. ஆசைகள் வளர்கின்றனவேயொழிய அவையென்றும் குறைவதில்லை. கடலில் அலைகள் என்றும் ஓய்வதில்லை. அதுபோல் ஆசையின் காரணமாக நமது தேவைகளும் ஒன்றன்பின் ஒன்ருக வந்த வண்ணமே இருக்கின்றன.

ஆசையின் காரணத்தால் எழும்தேவைகள் எண்ணற்றவை என்பதனைப் பொருளாதார நூலினர் ' Wants are innumerable ' என்பர்.

அதனையே நம் முன்னோர்கள் அழகுபட உருவமாக்கி, ' ஆசைக் கடல் ' என்றனர்.

(3) அவ்வாசையாகிய கடலில்சிக்கி, கரையேற முடியாமல் தவிக்கிருேம். அதன் காரணமாக பல பிழைகளும் செய்து, மீண்டும் காலனின் பாசத்தில் சிக்கி இன்னல் எய்துகிருேம். " அவஞ்செய்வார் ஆசையுட்பட்டு " என்ற குறள் கருத்துப்படி ஆசைக்குட்பட்டு அவம்பல புரிகிருேம். அதற்கேற்ப அந்தகனின் பாசக்கொடுமையினையும் சந்திக்க நேரிடுகிறது. ஆகவே ' அகப்பட்டு ' என்றும் ' அல்லற்படவிருந்தேன் ' என்றும் கூறினர்.

(4) பச்சைக் குழந்தை என்ருே, தாயின் ஒரே மகன் என்ருே, இன்றுதான் திருமணமானவன் என்ருே, எந்தவிதக் கருணையினையும் அவன் காட்டுவதில்லை. தனது கடமையினை நிறைவேற்றுவதிலேயே முனைப்பாய் நின்று அதனை முடித்து விடுவதால் அவனை ' அருளற்ற அந்தகன் ' என்ருர்.

(5) அந்தகன் என்ருல் ' குருடன் ' என்பது பொருள். சிறிதும் பாரபட்சமின்றியும் மேற் கூறியவாறும் செயல்படுவதால் அவனை அந்தகன் என்றனர்.

கையில் தராசுக்கோல் ஏந்தி, கண்களை இறுகக் கட்டிய நிலையில் மேல்நாட்டில் ' நீதி தேவதையின் உருவம் சித்தரிக்கப் படுவதும் இங்கு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கதாகும்.

மற்றும் உயிர்களுக்கு அந்தத்தை (முடிவினைச்) செய்வதாலும், வாழ்வின் அந்தத்தில் சந்திக்க வேண்டியவனாக இருப்பதாலும் கூற்றுவனை அந்தகன் என்றனர்.

(6) ஆசைக் கடலில் அகப்பட்டுத் துன்பப்பட்டவனிடம் சிறிதும் கருணையின்றித் தானும், அவரவர் வினைகளுக்கேற்பப் பாசத்தால் கட்டியிழுத்துச் சென்று துன்பப்படுத்துகிறான். இவ்வாறு அகப்படுதலும், அல்லற்படுதலும் அம்பிகையின் அடியவராய் ஆவதற்கு முன்பு இருந்த நிலையாகும். இப்போது அவனுக்கு இங்கு வேலையில்லை. எனவே " அல்லற்பட இருந்தேனை " என இறந்தகால நிகழ்ச்சியாகக் கூறினார்.

(7) இறையருளுக்குப்பாத்திரமாகிவிட்டால் மேற்சொன்ன கொடுமைகள் ஏதும் இல்லை. ஆகவே " நமனை அஞ்சோம் " என்றார் அப்பர்பெருமான். " கொடுங்கூற்று என் செயும் ? " என வினவினார் அருணகிரியார்.

" காலா! என் கால் அருகே வாடா !
சற்றே உனை உதைக்கின்றேன் "

என அந்தகனையே அச்சுறுத்தினார் அமரகவிபாரதியார்.

(8) அடியவர்கள்மாட்டு அந்தகன்கொடுமை இல்லையாகச் செய்பவள் அன்னை. எனவே, சகஸ்ரநாமம் ' காலகண்டி ' எனவும், ' காலஹந்தி ' எனவும் புகழ்ந்துரைக்கின்றது.

(9) பாரதியும் தமது பாஞ்சாலி சபதத்திடை அவளை :-

" கடா எருமை ஏறும் கருநிறத்துக் காலனார்
இடாது பணிசெய்ய இலங்கு மகாராணி "

என அழகுபடப் புகழுகிறார்.

(10) அன்னையின் காலின் வாசம் பட்டது! அந்தகனின் கைப்பாசத்தின் பணி இனி இல்லை என்பதாயிற்று எனும் நயம் தோன்ற அடுத்த அடிகள் அமைகின்றன.

### இ. நின்பாதமென்னும் .......... என் சொல்வேன்?

(1) நினது திருவடியாகிய மணம் மிக்க தாமரையினை எனது தலைமீது வலிய நீயே சூட்டி அருளிய நினது அன்பினை என்னென்றுரைப்பேன்?

(2) அபிராமிபட்டருக்கு, அம்பிகை வலியச்சென்று, தனது திருவடியைச்சூட்டிஅருளி (பாததீட்சை தந்தருளி) யிருக்கிருள் என்பதற்கு "வாசக் கமலம் தலைமேல் வலிய வைத்து" என்ற இவ்வடியே அகச்சான்று. ஸ்பரிஸ தீட்சை முதலான தீட்சைகளில் மிகவுயர்ந்ததும், இணையற்றதும் ஆகும் இத்திருவடி தீட்சை.

(3) குரங்கு தனது குட்டியினை ஓரிடத்தில் விட்டுவிட்டு, மரத்துக்கு மரம் தாவிச்செல்லும். அப்போது குட்டியும் தாய்க் குரங்கினை விடாது தொடர்ந்துசென்று பால்பருகும். அதுபோல் அகப்படாத இறைவனைத் தொடர்ந்து அடியவர் சென்று சிக்கெனப் பிடித்தல் 'மர்க்கட நியாயம்' அல்லது 'குரங்கு நெறி' எனப்படும் (மர்க்கடம் என்ருல் குரங்கு)

அதற்கு மாருக பூனையோ தனது குட்டியினை விட்டுவிட்டுச் சென்று அவ்விடத்திற்கு உரிய நேரத்தில் தானே வந்து பாலூட்டிச் செல்லும். அதுபோல் தன் அடியவரைத் தெய்வம் தானே தேடிவந்து தடுத்தாண்டு அருட்செய்வது "மார்ச்சால நியாயம்" அல்லது 'பூனை நெறி' எனப்படும். (மார்ச்சாலம் என்ருல் பூனை)

அபிராமி பட்டரை மார்ச்சால நியாயத்தால் அம்பிகை தானே நாடித் தேடிப்பிடித்து, திருவடி தீட்சையும் கொடுத் தருளியதால் "பாதமென்னும் வாசக்கமலம் தலைமேல் வலிய வைத்து" என்ருர்.

(5) உரிய நேரத்தில் பால் நினைந்து ஊட்டவரும் அப்பூனையினைப் போல் உரிய நேரத்தில் வந்து உதவிய — நான் மறப்பிலும் நீ மறவாத நிலையினை என் சொல்லிப் புகழ முடியும் என வினவுகிருர்?

(6) ஆசைக்கடலில் இருந்து தூக்கியது, அந்தகனின் பாசத்திலிருந்துமீட்டது, வலியவந்தது. வாசக்கமலம் சூட்டியது, தனக்கு ஆட்படுத்திக்கொண்டது ஆகிய அனைத்தையும் கருணையுடன் செய்த அவளது பேரன்பினைப் புகழ என்னதான் சொல் இருக்கிறது? ஆகவே நேசத்தை என்சொல்லுவேன்? எனவியக் கிருர்.

செய்யாமல் செய்த உதவி இது!

காலத்தாற் செய்த உதவி இது!

பயன் கருதாமல் செய்த உதவி இது!

வையகமும், வானகமும், கடலும் மலேயும்கூட இணையாக முடியாத இவ்வுதவிசெய்த நேசத்தை என்ன என்றுதான் சொல்ல முடியும்?

(7) "மற்றத் தெய்வங்கள் கைகளால் தரக்கூடியவற்றினை யெல்லாம் காலினுலேயேதரும் பெருமையுடையவள் நீ" என சௌந்தரியலகரியில் புகழுகிருர் ஆதிசங்கரர்.

இங்கோ கைப்பாசம் தரவிருந்த அல்லலினைக் கால்வாசத்தினுல் மாற்றியிருக்கிருய் என்பதுபோல் குறிப்பிடுகின்றன "அந்தகன்கைப் பாசம்" மற்றும் "பாதமென்னும் வாசக்கமலம்" என்ற சொற்ருெடர்கள்! வலியவைத்தாய்! ஆனுல் வன்மையாக வைக்காது மென்மையான வாசக்கமலத்தினை வைத்தாய்! இதுவும் இங்கு ஓர் நயம்!

### ஈ. சுந்தரர் வரலாற்றினை உணர்த்தும் குறிப்பு

இப்பாடலின் ஈற்றடியில் "ஈசர் பாகத்து நேரிழையே!" என்ற விளி அமைந்திருப்பது ஒரு குறிப்பினை உணர்த்துகிறது.

"நேசத்தை என்சொல்வேன்?" என முதலில் வியக்கிருர். ஆனுல், பின்பு! "வலியவைத்த நேசம் உனக்கு ஒன்றும் புதிதல்ல. அல்லது எமது வியப்புக்குரியதும் அல்ல! என எண்ணுவதுபோல் அமைகிறது "ஈசர்பாகத்து நேரிழையே!" என்ற விளி. வலியவைத்த நேசம் ஏன் வியப்புக்குரியது அல்ல என்ருல் "நீ ஈசர் பாகத்து நேரிழை யாதலால்" என்ற விடை கிடைக்கிறது.

அதாவது உரியநேரத்தில் சுந்தரரைத் தடுத்து ஆண்டு கொண்டு, பின்னர், சித்தவடமடத்தில் அவர் படுத்திருந்த பொழுது வலியச்சென்று திருவடி சூட்டிய திருவருளுக்குரிய ஈசனின் பாகத்தில் உறையும் உனக்கு – மார்ச்சால நியாயத்தால் தடுத்தாளும் தயாபரராகிய ஈசனின் இடப்பாகத்தில் இருக்கும் உனக்கு இது ஒன்றும் புதியதல்ல! எமக்கும் வியப்புக்குரியதல்ல என்ற கருத்துக்களைக் குறிப்பால் உணர்த்தி நின்றது. மேற்படி ஈற்றடியில் வரும் ஈசர் பாகத்து நேரிழையே! என்ற விளி.

தெய்வத்தின் உதவி தானே வலிய வந்து எய்துதல் இப்பாடலின் பாராயணபலன் ஆகும்.

# "ஆசார்ய போகம்"

**வித்துவான் திரு. அடிகளாசிரியர்,**

சிறப்புநிலை இணைப்பேராசிரியர்,

சுவடிப்புலம், தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

தஞ்சை இராசராசேச்சுரத் திருக்கோவிலின் கருவறையின் தென்புறத்திலுள்ள முதற்படை இரண்டாம் படைகளில் வெட்டப் பட்டுள்ள முதலாம் இராசேந்திர சோழதேவன் கல்வெட்டு அவன் கொடுத்த ஆசாரிய போகத்தைப் பற்றிய செய்தியைக் கூறுகிறது.

## கல்வெட்டு

"கோப்பரகேசரி வர்மரான உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு யகூ ஆவது நாள் இருபத்திரண்டினல் உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர் கங்கைகொண்ட சோழ புரத்துக் கோயிலினுள்ளால் முடிகொண்ட சோழன் திருமாளி கையில் வடபக்கத்து தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் தாநஞ் செய்தருளாயிருந்து? உடையார் ஸ்ரீராஜராஜ ஈஸ்வரமுடையார் கோயிலில் ஆசார்ய போகம் நம் உடையார் சர்வசிவ பண்டித சைவாசார்யார்க்கும் இவ்வுடையார் சிஷ்யரும் ப்ரசிஷ்யருமாய் ஆர்ய ‡ தேசத்தும், மத்திய தேசத்துத்தான், கௌடதேசத்துத் தான் உள்ளாராய் யோக்யராயிருப்பார்க்கே ஆட்டாண்டு தோறும் இத்தேவர் கோயிலில் ஆடவல்லான் என்னும் மரக் காலால் உள்ளூர்ப் பண்டாரத்தே நிறைச்சளவாக இரண்டா யிரக் கல நெல்லு ஆட்டாண்டு தோறும் சந்திராதித்தவல் பெறத்திருவாய் மொழிந்தருளத் திருமந்திர ஓலை செம்பியன் விழுப்பரையன் எழுத்தினல் திருவாய்க் கேள்விப்படி கல்லில் வெட்டித்து இது. இவ்வம்சத்துள்ளசைவ ஆசாரியர்களே இத் தன்மம் ரக்ஷிக்க" என்பது அக்கல்வெட்டின் செய்தியைக் கூறும் பகுதியாகும்.

---

‡ "ஆர்ய தேசத்தில் உள்ள பல தேசங்களில் மத்திய கௌடதேசங்களில் தோன்றியுள்ளாராய் சைவாசாரியம் செய்ய யோக்கியராயிருப்பார்க்கே" என்று கருத்து.

## அறிஞர் கருத்து

இக்கல்வெட்டைப் படித்த அறிஞரெல்லாம் இராசேந்திர சோழதேவனுக்குச் சைவாசாரியராய் விளங்கியவர் சர்வசிவ பண்டிதரென்றும் அவருக்கு இரண்டாயிரக்கல நெல் யாண்டு தோறும் அளிக்குமாறு ஏற்பாடு செய்தானென்றும்; அரசனின் ஆசிரியராகிய சர்வசிவ பண்டிதரும் அவருடைய சீடர்களும் எந்த நாட்டிலிருந்த போதிலும் கொடுக்கும்படி ஆசார்ய போகமாக ஆண்டுதோறும் நெல் அளப்பதற்கு ஆணை பிறப்பிக்கப்பட்டதென்றும் எழுதியுள்ளனர். இவர்கள் கருத்து முற்றிலும் சரியா என்பதைநாம் ஆராய்வோம்.

## அறிஞர் கருதுக

மேற்கண்ட கல்வெட்டுத் தொடர், 'ராசேந்திர சோழ தேவனுகிய தனக்கு ஆசார்யராகிய சர்வசிவ பண்டிதர்க்கு' என்று எழுதப்படவில்லை; "ஸ்ரீ ராஜராஜ ஈஸ்வரமுடையார் கோயிலில் ஆசார்ய போகம் நம் உடையார் சர்வசிவ பண்டித சைவ ஆசாரியார்க்கு" என்றே எழுதப்பட்டுள்ளது. அதனுல் சர்வசிவ பண்டிதர் ராஜராஜேஸ்வரமுடையார் கோவிலில் சைவாசாரியம் செய்பவராக யிருந்ததோடல்லாமல் இராசேந்திர சோழனுக்கும் சைவாசாரியராய் இருந்தனர் என்னும் உண்மை துணியப்படுகின்றது.

## தேவகாரியம் பார்ப்போர்

சிவாலயங்களில் சைவாசாரியம் செய்பவரைப்பற்றி நாம் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். காமிகாகமம் ஆசார்ய லட்சணப் படலத்தில் ஆசாரியரைப் பற்றிய செய்திகள் பல கூறப்பட்டுள்ளன. "தேவ காரியம் பார்ப்போர் ஆசாரியார், அர்ச்சகர், ஸ்தானிகர், பாசகர், பரிசாரகர் என்று ஐவராவார், ( சுலோகம் – 11 – 12 ) ஆசார்யருக்கு விதிக்கப்பட்ட சமஸ்கா ரங்கள் ஏழுவகையாகும்; அவை சமயம், விசேடம், நிர்வாணம். அஸ்திராபிடேகம், ஆசார்யாபிடேகம், சிகாச்சேதனம், ஏழு வுஷுவங்களின் சோதனம் என்பவையாகும். (16 - 17) ஆசாரியர் நாட்பூசையாகிய நித்தியமும், உத்சவமும் பிரதிஷ்டை யாகிய நைமித்திகமும் காமியமாகிய பிராயச்சித்தமும்செய்வதற் குரியவராவார். (12) அர்ச்சகர்க்குச் சமயம் முதல்சிகாச்சேதனம் வரை ஆறு சமஸ்காரங்கள் விதிக்கப்பட்டுள்ளன. இவர் நாட் பூசையாகிய நித்தியம் மட்டும் செய்வதற்குரியர். உத்சவம்

பிரதிட்டை பிராயச்சித்தம் என்பவைகளைச் செய்தல் கூடாது (13) ஸ்தானிகர்க்குச் சமயம் முதல் ஆசார்யபிடேகம் ஈருகிய ஐந்து சமஸ்காரங்கள் விதிக்கப்பட்டுள்ளன. (27) இவர் உத்சவ விக்கிரகங்கட்கு அலங்காரம் மட்டும் செய்யலாம்; மூலலிங்கத்தைத் தீண்டுதல் கூடாது (29) பாசகர்க்குச் சமயம் முதலான நான்கு சமஸ்காரங்கள் விதிக்கப்பெற்றுள்ளன. (30) இவர் சிவாக்கினியினுல் சமயல் முதலானவற்றைச் செய்யவேண்டும். (14) பரிசாரகருக்குச் சமயம் முதலான மூன்று சமஸ்காரங்கள் விதிக்கப்பட்டுள்ளன; (32) அபிடேக தீர்த்தம் பூசைக்கு வேண்டும் பொருள் முதலானவற்றைத் தயாரித்து வைத்தல் இவர்க்குரிய தொழிலாகும்; இஃற்றிற்கு வேறுபட்ட தொழில்களை இவர்கள் செய்தல் கூடாது (15) "என்று தேவகாரியம் பார்ப்பவரின் வகைகளையும் பெயர்களையும் அவர்களுக்குள்ள சமஸ்காரங்களையும் செயல்களையும் அவ்வாகமம் விளக்கமாகக் கூறியுள்ளது.

மேற்குறிப்பிட்ட காமிகாகம வசனங்களால் திருக்கோவில்களில் தேவகாரியம் செய்யும் ஐவருள் ஆசாரியர் முதல் என்பதை அறிந்துகொண்டோம். மேலும் ஆசாரியரின் வகைகளைப்பற்றி அவ்வாகமம் கூறும் செய்திகளையும் பார்ப்போம்.

## ஆசாரியர் வகை.

"ஆசாரியர் சர்வசாதகர், போதகர், ஆசார்யர் என்றுமூன்று வகையினராயிருப்பர் (65) எல்லாத் தத்துவார்த்தங்களிலும் பாண்டித்திய முள்ளவராய், மந்திரம், கிரியை, பாவனை முதலிய எல்லாக் கர்மங்களையும் (சர்வ தத்துவார்த்தங்களையும் சர்வ கர்மங்களையும்) செவ்வையாய் அறிந்திருப்பவர் 'சர்வ சாதகர்' என்று கூறப்படுவர். மந்திரம், கிரியை, பாவனை இவைகளைப் போதகம் செய்பவர் போதகரெனக் கூறப்படுவர். எல்லாக் கர்மங்களையும் ஆசரிப்பவர் ஆசார்யரெனக் கூறப்படுவார் (66) ஆசாரியரைக் காட்டிலும் போதகாசாரியர் மேலானவர்; போதகரைக் காட்டிலும் சர்வசாதக ஆசாரியர் மேலானவராவார் (67).

மேற்கண்ட ஆகம வசனங்களை வைத்துக்கொண்டு மேற்குறித்த கல்வெட்டிற் கண்ட சைவாசாரியக்குச் 'சர்வசிவ பண்டிதர்' என்று பெயரிருத்தலை நோக்கினுல் அப்பண்டிதர் மூன்று வகையான ஆசாரியரில் தலைமையான 'சர்வ சாதகர்' என்னும் ஆசாரியராவர் என்பது புலனுகின்றது. சர்வ சாதகர் சர்வசிவ பண்டிதர் என்னும் சொற்களில் உள்ள சர்வ' என்னும் சொல்லை அறிஞர் கருதிப்பார்க்க வேண்டும்.

மேலும் அவ்வாகமம் கூறும் சிலசெய்திகளைப் பார்ப்போம். "இந்தமுன்றுவகையான ஆசாரியர்களும் உத்சவம் பிரதிட்டை முதலான காரியங்களைச் செய்யும் பொழுது தனியே சாதகர் ஒருவரைத் தங்களுக்கு உதவியாக உடன் வைத்துக் கொண்டு செய்தல் வேண்டும் (68)" என்று கூறுகின்றது. இவரைச்சாதகா சிரியர் என்று கூறுவோம்.

மேற்கண்ட கல்வெட்டில், சர்வ சிவபண்டிதரின் சிஷ்யரும் ப்ரசிஷ்யருமாய்க் குறிக்கப்பட்டவர் மேற்படி பண்டிதருக்கு உத்சவம் முதலான காரியங்களில் சாதகராயிருக்கும் போதகர் முதலான ஆசாரியரும் சாதகாசாரியருமாவார்.

## சோழன் ஆணையின் கருத்து.

இராசராசேச்சுரமுடையார் கோயிலில் மேற்கண்டபடி சைவாசாரியம் செய்யும் சர்வசிவ பண்டிதருக்கும், அவருடைய சிஷ்யரும் ப்ரசிஷ்யருமாய் ஆர்ய தேசத்திலும், மத்திய கௌட தேசங்களில் தோன்றியுள்ளவராய் மேற்படி கோவிலில் சைவா சாரியம்செய்ய யோக்யராயிருப்பார்க்கே ஆண்டாண்டுதோறும் கோவிலிலுள்ள வருமானத்திலிருந்து இரண்டாயிரக்கலநெல்லை ஆசார்ய போகமாகக் கொடுக்க இராசேந்திர சோழதேவன் ஆணையிட்டானேயன்றி, சர்வசிவ பண்டிதர் தனக்கு ஆசார்ய ராயிருக்கின்றூர் என்ற ஒன்றை மட்டும் கருத்தில் வைத்துக் கொண்டு அவரும் அவருடைய சீடர்களும் எந்த நாட்டில் இருந்த போதிலும் ஒவ்வொருவருக்கும் இரண்டாயிரக்கலக் கோவில் நெல்லை அளந்துவிட வேண்டும் என்று ஆணையிட்டா னல்லன். மேற்கண்ட கல்வெட்டில் 'கோயிலில் ஆசாரிய போகம்' என்னும் சொற்றொடரை அறிஞர் எண்ணிப் பார்க்க வேண்டும்.

## பஞ்சாசார்யர்

பல கல்வெட்டுகளில் 'பரியார மூலப்பட்டுடைப் பஞ்சா சாரிய தேவகன்மிகள்' என்றும், 'பதிபாத அல்லது பிரதிபாத மூலப்பட்டுடைப் பஞ்சாசாரிய தேவகன்மிகள்' என்றும் வரும் சொற்றொடருக்குக் கல்வெட்டுத்துறையினர் ........................ என்று திருத்தி எழுதியுள்ளனர். பிறரெல்லாம் கோயில் அருச்சக்கர் என்று குறித்துப் போந்தனர். பஞ்சாசாரியர் இன்னூர் என்பதை

" ஆசார்யாதி ஸமாரப்ய பரிசார சமாவதி
பஞ்சா சார்ய மிதிக்யாதம் தத்தத் ஸம்ஸ்காரகுண்ய த:

(காமிகம் – ஆசார் – 62(

"ஆசாரியர் முதலாகப் பரிசாரக ரிறுதியாய் அவரவர் சமஸ்கா ராறுகுணமாய்ப் பஞ்சாசார்யரெனப்படுவார்" என்னும் காமிக சுலோகத்தால் ஆசாரியர், அர்ச்சகர், ஸ்தானிகர், பாசகர், பரிசாரகர் என்னும் ஐவரும் பஞ்சாசாரியர் என்று வழங்கப் படுவார் என்பதை அறிந்து கொள்கின்ரும். இப்பஞ்சா சாரியரின் ஒழுக்கத்தை

"நெஞ்சாசார நிறைவொடு குறையாப்
பஞ்சா சாரியப் பகுதி யோர்க்கும்"

(தென் – வால்யூம் – 7 – 940)

என்று கல்வெட்டொன்று கூறுவதைக் காண்க.

## முடிப்புரை

கல்வெட்டாராய்ச்சியை எல்லாரும் மிக எளிமையாகச் செய்துவிடமுடியும் என்று சிலர் கருதுகின்றனர். நம் தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களை ஆராய்வதற்குத் தமிழிலக்கிய உணர்ச்சியும் வடமொழியறிவும் உலகியலறிவும் நன்கு வாய்க்கப்பெற்றவரே தகுதியாவர் என்பதைத் தமிழுலகம் எண்ணிப் பார்க்கவேண்டும்.

---

## திருவெம்பாவைச் சிறப்பு

சைவத்திருமுறைகளுள் எட்டாம் திருமுறை திருவாசகம் மாணிக்கவாசகரால் அருளிச்செய்யப்பெற்றது. அருளனுபவப் பெட்டகமாகத் திகழ்வது. இதன் ஒரு பகுதி திருவெம்பாவை, இருபது பனுவல்களால் இயன்றது. மார்கழி நீராடலைச் சிறப் பித்துக்கூறி, பாவை நோன்பினைக் குறிப்பால் அறிவுறுத்துவது. மலவிருளில் இருந்து விடுபட்டு, சிவனருளில் திளைத்தாடுதலே திருவெம்பாவையின் உள்ளீடு என்பது பழைய ஓர்குறிப்பாகும். 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக' என இறைவனே வேண்டியதாக ஒரு வழக்கு உண்டு. திருவாதிரைக்கு முதல் பத்து நாட்கள் சிவாலயங்களில் திருவெம்பாவை உற்சவம் நடைபெறுவது வழக்கம். இக்காலத்தில் சிவாலயங்களில் ஏனைய திருமுறைகளைத் திருக்காப்பிட்டு வைத்து, எல்லாச் சந்நிதிகளிலும் திருவெம்பாவை மட்டுமே ஓதுதல் பழக்கத்தில் உள்ளது. இறைவனின் பஞ்ச கிருத்தியமும் இதன் இறுதிப் பாடலில் முறையாகக் கூறப்பட்டிருக்கிறது. மார்கழியில் நாமும் திருவெம்பாவை ஓதி சிவனருள் பெற்றுச் சிறப்போமாக.




**ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்**

ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(துந்துபிஞு மார்கழிமீ 1உ முதல் 29உ முடிய)

(16—12—1982 முதல் 13—1—1983 முடிய)

| | | | |
|---|---|---|---|
| | | | ரா |
| | இராசி | | |
| செ | | | |
| ல/ பு சூ சந் சு கே | கு | சனி | |

| | | | |
|---|---|---|---|
| | சூ | | சு சந் |
| | அம்ஸம் | | ல/ கே |
| ராகு செ | | | பு கு |
| | சனி | | |

ஸ்ரீ துந்துபிஞு மார்கழிமீ 1உ குருவாரம் மூலநக்ஷத்திரம் பவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 2 நாழிகை 9 விஞடிக்கு தனுர் லக்கினத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு விருச்சிக ராசியி லிருந்து தனுர் ராசி சங்கிரமணமாக தேவமானரீதியில் தேவர் களின் பிராத காலம் பொழுதாகிய மார்கழி மாதம் பிரவேசம் செய்துவிடுகிறுர். அன்று ஷடசீதி புண்ணிய காலமாகும். அன்று தனுர்மாத பூஜாரம்பம். தானியாதிபதி குருபகவான் ஆகிறுர். அதனுலும் சங்கிரமகால கிரகஸ்திதியாலும் லோகில் எல்லா இடங்களிலும் நல்ல மழை பெய்து எல்லாபயிர்களும் செழித்திருப்பதுடன் பசுக்கள் மிகுந்த பாலைக்கொடுக்கும். ஆன்றோர்களால் லோகில் சிவ புண்ணிய கைங்கர்யங்கள் ஆலயத்திருப்பணிகள் தர்மங்கள் வெகுவாக நடந்துவரும். தேசங்களில் ஆளுநர்கள் ஈஸ்வரன் கட்டளைப்படித் தெய்வ

நீதியாக ஆட்சிபுரிந்து பிரஜைகளுக்கு நன்மைகள் பல செய்து இரட்சிப்பார்கள். பிரஜைகள் உழைப்பினுல் நல்ல செல்வம் பெருக்கி உய்வார்கள்.

உலகில் உள்ள திருமடங்களின் ஆசாரிய பீடங்களில் சிவபெருமானை பூசித்துவருகின்ற சிவகளை பொலிவுற்று திகழ் கின்ற சிவஞான குருமகான்கள், இந்த தேவமான மார்கழிமாத விடியலில் சிறுபிராயத்தினர் சிஷ்யகோடிகள் அனுஷ்டிக்க வேண்டிய நல்வழியினையும் அதனுல் ஏற்படுகின்ற திருவினையும் திருவாய்மலர்ந்து இயம்பி அருள்வார்கள். அன்னுர் வழியில் தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறு கால பூசைகள் விசேஷ உஷாக்கால பூசைகள் சிறப்புடன் நடந்து வரும். பிரஜைகள் தேவாலயம் சென்று உஷாக்காலத்தில் தெய்வ தரிசனம் செய்து மனம் தெளிவுற்று நல்வசனம் நற்கிரி யையில் நற்புகழடைந்து பொருளீட்டி சீரிய வாழ்க்கை நடத்துவர்.

## சந்திர கிரஹணம்

குறிப்பு :- துந்துபிஸூ மார்கழிமீ 15உ (30—12—1982) குருவாரம் திருவாதிரை 3 ஆம் பாதத்தில் சம்பவிக்கும் பூரண இராசி கிரஸ்தாஸ்தகபிலவர்ண சோமோபராக புண்யகாலம்.

| இது இந்தியன் ஸ்டாண்டர்டு | | | மணி | நிமிடம் |
|---|---|---|---|---|
| டிசம்பர் 30 தேதி | | ஸ்பர்சம் | 15 | 21 |
| ,, | ,, | நிமீலனம் | 16 | 28 |
| ,, | ,, | மத்யம் | 16 | 58 |
| ,, | ,, | உன்மீலனம் | 17 | 29 |
| ,, | ,, | மோக்ஷம் | 18 | 37 |
| | | ஆதியந்தம் | 3 | 16 |

பிரமாணம் 1-19; ஸ்பர்சம் சந்திரபிம்பத்தில் மேற்குக்கு 19 பாகை வடக்கே தள்ளி ஏற்படும், ஐந்திரபர்வா மறுநாள் பரிசிரார்த்தம் செய்யவேணும். மிருகசீர்ஷம் பிற்பாதி திருவா திரை, புனர்பூசம் மூன்றுபாதம் சுவாதி, சதயம் இவற்றில் பிறந்தோர் சாந்தி செய்து கொள்க.

இவ்வாண்டு 15 தினங்களிலேயே சூரிய சந்திரர்களுக்கு கிரகஹண மேற்படுகிறபடியால் உலகில் மன்னர்களுக்குள் போர், அம்மை, பேதி, கௌமாரி கால்நடைக்ஷீணம், பஞ்சம் காணும்.

**பரிகாரம் :–** இதற்கு எல்லா தேவஸ்தானங்களிலும் உலகசுபிட்சம் வேண்டி சர்வேஸ்வரனுக்கு ஆராதனைகள் இலட்ச கோடி அருச்சனைகள் நடைபெறுதல் வேண்டும். ஈஸ்வரனருளில் க்ஷேமம் நிலவும்.

1. மேஷம் :- அசுவதி – பரணி. கார்த்திகை – ¼
( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்களில் நல்லஸ்திதியை ஏற்படுத்தி வரும். பொன் மணி பூஷணம் தரும். டிஸம்பர் மாதத்திற்குள் புதிய வாகனபிராப்தியையளிக்கும், செந்நெல்பிராப்தி சிவந்த வஸ்துவின் பிராப்தியில் ஜனவரி 6 தேதி முதல் நல்ல ஆதாயம் வரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிஸம்பர் 18, 19, 20, 21, 22, 25, 26, 27, 30, 31 ஜனவரி 5, 6, 7, 8, 9, தேதிகளில் தனுதாயம் இஷ்டசித்தி தெய்வ புண்ணிய க்ஷேத்திரம் செல்லுதல் ஆகும். ஜனவரி 10, 11 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீர்ஷம் ½
( இ. ஊ. ஏ. – ஒ. வ. வி. வூ. – வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் கணிசமாக வரும். உற்ருர்உறவினர்களின் அன்பும் மனக்களிப்புறும் சம்பவங்கள் ஏற்படும். ஓர்தெய்வஸ்தலம் சென்றுவருதல் ஆகும். தாரபுத்திரர் களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிஸம்பர் 21, 22, 23, 24, 28, 29 ஜனவரி 1, 2, 7, 8, 9, 10, 11 தேதிகளில் தனுதாயம் மேலிடுதல் ஆகும். டிஸம்பர் 16, 17 ஜனவரி 12, 13 தேதிகளில் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾
( கா. கி. - கு. க. ஸ. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானங்களில் நல்லஸ்திதியை ஏற்படுத்திவரும். ஓர் ஆபரண பிராப்தியையளிக்கும். நவீன வாகனம் தரும். இராசிக்கு ஓர் விபத்து ஏற்பட்டு தப்பும். ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு அருச்சனை செய்ய நலம் தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிஸம்பர் 16, 17, 23, 24, 25, 26, 27, 30, 31, ஜனவரி 3, 4, 10, 11, 12, 13,

தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். டிஸம்பர் 18, 19, 20 தேதிகள் சந்திராஷ்டமம் மற்றதேதிகளில் மத்திம பலன் தரும்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் தனவருமானம் வரவாகிக் கொண்டிருக்கும். வித்துவத்துவம் கலைதுறைகளில் விசேஷபலனை ஏற்படுத்தும். புத்திசாதுரியத்தில் எல்லாகாரியங்களையும் நடத்தும். இராஜ கண்யம்தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். டிஸம்பர் 16, 17, 18, 19, 20, 25, 26, 27, 28, 29 ஜனவரி 1, 2, 5, 6, 12, 13 தேதிகளில் தனுதாயம், காரியஜெயம், நன்மதிப்பு, அரசமரியாதை இவை ஏற்படும். டிஸம்பர் 21, 22 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திம பலன் தரும்.

5. சிம்மம் :- மகம் - பூரம் - உத்திரம் ¼

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே.)

சிம்மராசி 9 பாதங்களும் நற்பலன்தரும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் கௌரவத்திற்கு ஏற்பமிகுந்துவரும், பந்து மித்திரர்களின் நலனுக்கு பிரயாசைமிகுதல் உறுதிவாக்களித்தல் அதன்படி நடத்தல் ஆகும். எல்லா காரியங்களும் செவ்வையாக நடந்துவரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 18, 19, 20, 21, 22, 27, 28, 29, 30, 31 ஜனவரி 3, 4, 7, 8 தேதிகளில் வைபோகநிகழ்ச்சி, தெய்வ தரிசனம் நன்மதிப்பு ஆகிய நற்பலன் ஏற்படும். டிசம்பர் 23, 24 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்,

6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½

( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபி விருத்தியில் தனவருமானங்கள் கணிசமாகவரும். பத்திரலிகிதங்களில் அரசாங்கமுலமாக நல்லன ஏற்படும். வாகனசுகம் திருப்தியளிக்கும். பூமியில் இயந்திரங்களில் விருத்திபலன் ஏற்படும். ஜனவரி 6வ. ஆனுல் எல்லாவற்றிலும் ஜெயம் தரும். ரோகம் குணமாகும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 21, 22, 23, 24, 30, 31 ஜனவரி 1, 2, 5. 6, 10, 11, தேதிகளில் தனுதாயம், மகிழ்ச்சிதரும் சம்பவங்கள் பிரவிருத்திகளில்

நன்மைகள்ஏற்படும். டிசம்பர் 25, 26, 27 தேதிகள்சந்திராஷ்டம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

7. துலாம் :- சித்திரை ½ - சுவாதி - விசாகம் ¾
(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலாரர்சி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பணவருமாணம் பெருமதிப்பில் வந்துசேரும். சகோதரர், சகோதரிகளின் சுகம் நன்ருகஇருந்துவரும். ஜனவரி முதல் புதிய வாகன பிராப்தியை அளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். டிசம்பர் 16, 17, 23, 24, 26, 27 ஜனவரி 1, 2, 3, 4, 7, 8, 12, 13 தேதிகளில் தனுதாயம், இஷ்ட சித்தி தெய்வதரிசனம் ஆகிய நற்பலனளிக்கும். டிசம்பர் 28, 29 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன்தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.
(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் கணிசமாக வந்து கொண்டிருக்கும். அடிக்கடி அவசியசெலவினங்களும் ஏற்படும். அரசாங்கக் கடிதங்களில் நல்லசேதிவரும். பூமியில் இயந்திர சாதனங்களில் நற்பலன் ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 18, 19, 20, 26, 27, 28, 29 தேதிகள் ஜனவரி 3, 4, 5, 6, 10, 11 தேதிகளில் தனுதாயாதி நற்பலகளையளிக்கும். டிசம்பர் 30, 31 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேகளில் மத்திம பலன் தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் ¼
(யே, யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் வந்துகொண்டிருக்கும். உடன் சுபமான காரியங்களில் செலவும் ஆகும். வார்த்தைபிரயோகத் தினுல் மனசுக்கு ஒருபுறம் சங்கடம் ஏற்படும். பின் நிதானித்தல் சரிசெய்தல் ஆகும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்து வரும். உத்தியோகத்தில் அரசாங்க லிகிதங்களில் புத்திசாதுரி யத்தினுல் செயலாற்றுதல் ஆகும். டிசம்பர் 16, 17, 21, 22, 28, 29 30, 31 ஜனவரி 6, 7, 8, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன் களையளிக்கும். ஜனவரி 1, 2 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்

10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½
( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி. )

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவரவுகள் வந்துகொண்டிருக்கும். அவசிய மான விஷயங்களில் செலவும் ஆகும். சகோதரர் சுகம் நன்றாக இருந்துவரும். வீடுவாகனங்களில் நல்ல சௌகரியம் இருந்து வரும். இல்லத்தில் சுப நிகழ்ச்சி ஒன்று ஏற்படும். டிசம்பர் 18' 19, 23, 24, 30, 31 ஜனவரி 1, 2, 7, 8, 9, 10, 11 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜனவரி 3, 4 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸூ. - ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் சுபமான பலன்களைத்தரும். நல்ல பணவருமானங்கள்வந்துகொண்டிருக்கும். பூமியில் இயந்திரங் களில் நற்பலன் வரும். வாகனசுகம் திருப்தியளிக்கும். ஓர் தெய்வஸ்தலம் சென்று வருதல் ஆகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். டிசம்பர் 16, 17, 21. 22, 25 26, 27 ஜனவரி 1, 2, 3, 4, 10, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜனவரி 5, 6, தேதிகள் சந்திராஷ்டமம்' மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

12. மீனம்:- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.
( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் நல்ல பணவருமானம் வந்து சேரும். பூமியில் இயந்திரங்களில்விருத்திபலனை ஏற்படுத்தும். முன்பிருந்ததுன்பம் தீர்ந்து ஸ்திர சம்பத்தையளிக்கும். வித்தியாவியாபாராதிகளில் கலைத்துறையில் விசேஷபலன்வரும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். டிசம்பர் 16, 17, 18, 19, 20, 23, 24, 28, 29 ஜனவரி 3, 4, 5, 6, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜனவரி 7, 8, 9 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.



# செய்திகள்

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

**ஐப்பசித் திங்கள் :**

தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு 8—11—82 திங்கட்கிழமை யன்று திருவாய்மூர் அருள்மிகு வாய்மூர்நாதர் திருக்கோயிலில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடை பெற்றன. திருவாய்மூர்த் திருப்பதிகங்கள் வழிபாட்டின்போது பாராயணம் செய்யப்பெற்றன. தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிமுதல்வர் திரு.வி.சா.குருசாமிதேசிகர் எம்.ஏ. திருப்பதிக விளக்கம்கூறி உரையாற்றினர். அச்சிடப்பெற்ற தலத்திருப் பதிகநூல் வந்திருந்துவழிபட்ட அன்பர்கட்கு வழங்கப்பெற்றது. அன்பர் பலர் வழிபாட்டிற் கலந்துகொண்டு பயனுற்றனர்.

**கார்த்திகைத்திங்கள் :**

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு, யாழ்ப்பாணம், வரணி ஆதீனத்திற்கு உட்பட்ட வேதாரண்யம் அருள்மிகு வேதாரண்யேசுவர சுவாமி திருக்கோயிலில் 6—12—82 திங்கட்கிழமை யன்று மிகச்சிறப்காக நடைபெற்றது. விசேஷஅபிஷேக ஆராதனைகளுடன் நடைபெற்ற இவ்வழி பாட்டின்போது தலத் திருப்பதிகங்கள் பாராயணம் செய்யப் பெற்றன. காலை 10 மணியளவில் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. வேதாரண்யம் தேவஸ்தானம் பரம்பரை தர்மகர்த்தா யாழ்ப்பாணம் கருணைவாய் வரணி ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ ச. கதிர்காமப் பண்டாரசந்நிதி அவர்கள் தலைமையேற் ருர்கள். வேதாரண்யம் கஸ்தூர்பாகாந்திகன்யாகுருகுல நிர்வாகி, திரு. வே. அப்பாகுட்டிப் பிள்ளை வரவேற்புரை வழங்கினர். திரு. வை. பக்கிரிசாமிச் செட்டியார் பி. ஏ., பி. டி., வித்துவான் திரு. சோ. பாலசுப்பிரமணியம், வித்துவான் திரு. எஸ், எம். சுந்தரராஜன் எம். ஏ., தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ., ஆகியோர் சமய விரிவுரை ஆற்றினர். தேவஸ்தான நிர்வாக அதிகாரி நன்றி கூறினர். அச்சிடப்பெற்ற தலத் திருப்பதிகநூல் வந்தி ருந்த அன்பர்கட்கு வழங்கப்பட்டது அன்பர் பலர் இறை வழிபாடு ஆற்றியும் சொற்பொழிவுகளைக்கேட்டும் பயனுற்றனர்

## குருவருளும் அருளுபதேசமும்

### தருமையாதீனத் திருமடத்தில் :

ஒவ்வொரு ஆங்கிலமாதத்திலும் முதல் ஞாயிற்றுக்கிழமை அன்று காலை சரியாகப் 10-மணிக்கு ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானம் அவர்களை அன்பர்கள் வழிபட்டு அருளுபதேசம் பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக்கூட்டம் இம்மாதம் 5—12—82 அன்று பத்தொன்பதாவது சிறப்பு வழிபாட்டுக் கூட்டம் நிகழ்வுற்றது. காலை பத்துமணியளவில் தொடங்கிய இக்கூட்டத்தில் முதலில் கூட்டுப்பிரார்த்தனை நிகழ்ந்தது. அடுத்துத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருத்தொண்டர்புராணச் சிந்தனையாகப் பல அரிய கருத்துக்களை விளக்கி உபதேசித் தருளினார்கள். சுந்தரர் தவநெறிவேண்டிப் பெற்றது முதலாகத் திருவாரூரில் திருத்தொண்டத்தொகை அருளியமைவரை விளக்கினார்கள். தடுத்தாட்கொள்ளப்பெற்ற சுந்தரர் நிலையாமை உணர்வுபெற்று இறைவனிடம் தவநெறிவேண்டியமைபற்றி விளக்கித், தாய்தந்தையரை இழந்த நிலையில் திருநாவுக்கரசர் நிலையாமையை உணர்ந்து காவளர்த்தும் குளம்தொட்டும் செல்வத்தைச் செலவிட்டமை, திலகவதியார் நிலையாமை உணர்வு பெற்றபோது, தம்பியார் உளராகவேண்டும் என்னும் தயாவால் உயிர்தாங்கி இறைத்தொண்டுபுரிந்தமை, காரைக்காலம்மை வாழ்க்கையில் நிலையாமை உணர்வு ஏற்பட்டபோது கயிலாய நாதனை விரும்பிச்சென்றமை ஆகியவற்றை ஒப்பிட்டு வாழ்க்கையின் திருப்புமுனை நிலையாமை உணர்வு என அருளியமை சிறப்பாக இருந்தது. சுந்தரர்பெற்ற அனுபவநிலையை விளக்கும் "ஐந்துபேரறிவும்" எனத் தொடங்கும் பாடலுக்கு அன்பர்கள் அனைவரும் நன்கு புரிந்துகொள்ளும்வண்ணம் உரைவிளக்கம் செய்தார்கள். திருமயிலாடுதுறை நகரப்பெருமக்களும், சைவ மெய்யன்பர்களும் கலந்துகொண்டு பயன்பெற்றனர்,

அடுத்த பிரார்த்தனைக் கூட்டம் 2—1—1983 அன்று நிகழ இருக்கின்றது. அன்பர்கள் கலந்துகொண்டு அருளுபதேசம் கேட்டுப் பயன்பெறுவார்களாக.

## கந்தஷஷ்டி விழா

### தருமையாதீனத்தில் :

அருள்மிகு முருகப்பெருமானுக்கு உரிய திருநாள்களுள் மிகச் சிறந்ததாகக் கொண்டாடப்பெறும் கந்தசஷ்டி விழா 16—11—82 முதல் 21—11—82 ஞாயிறுவரை மிகச் சிறப்பான முறையில் நிகழ்வுற்றது. தருமையாதீனத்தில் ஆன்மார்த்த

மூர்த்தி ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் வழிபாட்டுடன் ஸ்ரீ முருகப் பெருமானுக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சிறப்பு வழிபாடு நிகழ்த்தியருளினர்கள். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர், திருவாசக உரைமணி, வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ., அவர்கள் ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூசை மடத்தில் விழா நாட்களில் நாள்தோறும் மாலை 6 மணியளவில் கந்தபுராண விரிவுரை நிகழ்த்தினர்கள். ஆதீன அடியவர்களும் அலுவலர்களும் அன்பர்களும்கேட்டுப் பயன்பெற்றனர்.

## ஆதீன தேவஸ்தானங்களில் :

தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி, திருபுவனம்' திருப்பனந்தாள், திருவையாறு, திருக்கடவூர், வைத்தீஸ்வரன் கோயில், மயிலாடுதுறை குமரக்கட்டளை, பேரளம் ஆகிய திருக்கோயில்களில்ஸ்ரீமுருகப்பெருமானுக்குச் சிறப்புவழிபாடும் 16—11—82 முதல் 21—11—82வரை தக்க அறிஞர்களைக்கொண்டு கந்தபுராணச் சொற்பொழிவுகளும் நிகழ்த்துவிக்கப்பெற்றன. சீர்காழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமி சந்நிதியில் மகாவித்துவான் திரு. சி. அருணை வடிவேல்முதலியார், திருப்பனந்தாள் ஸ்ரீஅருணஜடேசுவர சுவாமி திருக்கோயிலில் மதுரகவி, வித்துவான். திரு. தாம. வெள்ளைவாரணம், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி திருக்கோயிலில் வித்துவான். திரு. சுவர்ணகாளீஸ்வரன், திருபுவனம்ஸ்ரீகம்பகரேசுவரசுவாமி திருக்கோயிலில்வித்துவான் திரு. மு. சிவச்சந்திரன், எம். ஏ., திருக்கடவூர் ஸ்ரீ அமிர்த கடேசுவரசுவாமி திருக்கோயிலில் வித்துவான் திரு. மு. கோவிந்தராசன், வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக் கோயிலில் வித்துவான். திரு. கா. ம. கண்ணப்பன், பி. லிட்., திருமயிலாடுதுறை – குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்தில் வித்துவான். திருமதி. ப. நீலா, எம், ஏ., பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி தேவஸ்தானத்தில் வித்துவான். திரு. சொ. முத்தையன், எம். ஏ., ஆகியோர் கந்தபுராணச் சொற்பொழிவு ஆற்றினர். அவ்வத்தலத்து அன்பர்கள் முருகப் பெருமானைத் தரிசித்தும் பெருமான் புகழ்கேட்டும்இன்புற்றனர்.

வேளூர், ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்கும், மயிலாடுதுறை – குமரக் கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கும் சஷ்டி விழா ஆறு நாட்களிலும் விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும் திருவீதியுலாக் காட்சியும் நடைபெற்றன. குமரக் கட்டளை

ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு இலட்சார்ச்சனை நடைபெற்றது. அன்பர் பலர் தரிசித்து இன்புற்றுப் பயன்பெற்றனர்.

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றம்

### மயிலாடுதுறை (கிளை) கண்சிகிச்சை முகாம்

மயிலாடுதுறை ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றத்தினர் மயிலாடுதுறை ரோட்டரி சங்கத்தாருடன் இணைந்து 5—12—82 ஞாயிற்றுக்கிழமை காலை 8 மணிமுதல் பிற்பகல் 4 மணிவரை மணல்மேடு அரசினர் மேல்நிலைப்பள்ளியில் இலவசக் கண் சிகிச்சைமுகாம்நடத்தினர். மதுரை அரவிந்த் கண்மருத்துவமனை டைரக்டர், டாக்டர் திரு. G. வெங்கிடசாமி எம். ஏ,. எம். எஸ். அவர்களும், அவர்கள் குழுவினரும், கண்ணில்புரை உண்டாதல், நீர்அழுத்தம், சீழ்வடிதல், நீர்ப்பை அடைப்பு, மாறுகண், மற்றும் கண்தொடர்பான வியாதிகளுக்குப் பரிசோதனை செய்து மருத்துவம் செய்தனர். கண்ணாடிபோட வேண்டியவர்களுக்கு நியாய விலையில் கண்ணாடி கிடைக்க ஏற்பாடுசெய்தல், ஆப்ரேஷன் தேவைப்பட்டால் மதுரை அரவிந்த் கண்மருத்துவ மனையில் இலவசமாக ஆப்ரேஷன்செய்தல், ஆப்ரேஷன் தேர்வு பெற்றவர்கள் மதுரைக்குப்போக பஸ்வசதி செய்தல், 7நாள்கள் தங்க இடம் உணவு வசதிசெய்தல், இலவசமாகக் கண்ணாடி வழங்கல் முதலிய பல திட்டங்களை மயிலாடுதுறை ரோட்டரி சங்கத்தாருடன் இணைந்து செயற்படுத்தினர்.

### மதுரை ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில் கந்தபுராண விரிவுரை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 'கயிலைமாமுனிவர்' ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் ஆணையின்வண்ணம் மதுரை ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில் கந்தசஷ்டியை முன்னிட்டு 16—11—82 முதல் 21—11—82 வரை கந்தபுராணத் தொடர் விரிவுரை, மதுரைக் காமராசர் பல்கலைக்கழக ஆய்வுப் புலப் பேராசிரியர் சி. கோவிந்தராசனர் அவர்களால் நிகழ்த்தப் பட்டது. விரிவுரையை திரு. பி. டி. ஆர். கமலதியாகராசன் அவர்கள் தொடங்கி வைத்தார்கள். நிறைவு விழாவிற்கு மதுரை மருத்துவக் கல்லூரித்துணை முதல்வர் ஆ. சேது அவர்கள் தலைமைவகித்துப் பாராட்டினர்கள். பல்கலை ஆய்வுமாணவர் களும் மெய்யன்பர்கள் பலரும் கலந்து பயன்பெற்றனர். வித்துவான் தா. குருசாமி தேசிகர் வரவேற்று நன்றி கூறினர்.

---

# மார்கழிமாதச் சிறப்பு நாட்கள்

16—12—82 வியாழன், தனுர்பூஜாரம்பம். தனுர்ரவி 2-9, ஷடசீதி புண்ணியகாலம். திருவையாறு மாதப்பிறப்பு தீர்த்தம்.

21—12—82 செவ்வாய், சிதம்பரம், உத்தரகோசைமங்கை முதலிய தலங்களில் திருவெம்பாவை உற்சவாரம்பம். திருவையாறு ஊஞ்சல் உற்சவாரம்பம்.

23—12—82 வியாழன், தனுர் வியதீபாதம்.

24—12—82 வெள்ளி, வாயிலார் நாயனர் குருபூஜை.

25—12—82 சனி, தருமை 11 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் குருபூஜை.

26—12—82 ஞாயிறு, சர்வ வைகுண்ட ஏகாதசி.

27—12—82 திங்கள், வேளூர்க் கிருத்திகை. தருமை ஸ்ரீ சண்முகர் கிருத்திகை விரதம்.

28—12—82 செவ்வாய், பிரதோஷம்.

29—12—82 புதன், கர்ப்போட்ட ஆரம்பம் 4-57.

30—12—82 வியாழன், பௌர்ணமி விரதபூஜை. மாதபூஜையில் நெய் அபிடேகம். விடியற்காலம் ஸ்ரீ நடராஜர் அபிடேகம். ஆருத்திராதரிசனம். சீகாழியில் ஸ்ரீ உமா மகேசுவரருக்கு உச்சிக்காலத்தில் புழுக்காப்பு. சந்திர கிரஹணம். சடைய நாயனர் குருபூஜை.

1—1—83 சனி, தருமை 2 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக சுவாமிகள் குருபூஜை.

2—1—83 ஞாயிறு, சங்கடஹர சதுர்த்தி, ஆயில்ய விழா.

5—1—83 புதன், இயற்பகை நாயனர் குருபூஜை.

6—1—83 வியாழன், மகாகாளாஷ்டமி. காலபைரவாஷ்டமி.

8—1—83 சனி, மானக்கஞ்சாற நாயனர் குருபூஜை.

11—1—83 செவ்வாய், பிரதோஷம். கூடாரைவல்லி. திருக்கடவூர் ஸ்ரீ முனீசுவர பூஜை. கர்ப்போட்ட நிவிருத்தி 7-21.

12—1—83 புதன், மாதசிவராத்திரி.

13—1—83 வியாழன், சர்வ அமாவாசை. அனுமத் ஜெயந்தி. சாக்கிய நாயனர் குருபூஜை. போகிப் பண்டிகை.

---

## இந்து எனப்படுவான் யார்?

பிறஉயிரினங்கள்துன்புறும்நேரத்தில் அதனைத்துடைக்க எண்ணுவதும், அங்ஙனம் துடைக்கஇயலாவிடில் அதுகண்டு துன்புறுவதும் இந்து எனப்படுவான் ஒவ்வொருவனுக்கும் உரிய பண்பு.

— 26வது ஸ்ரீலஸ்ரீ குருமணி அவர்கள்.

Printed & Published by V. Ramaiah Pillai. Managar. Dharmapuram
at the Gnanasambandam Press Dharmapuram. Mayiladuthurai 10-12-82